உ

கணபதி துணை.



யாழ்ப்பாணத்து நல்லூர்

ஸ்ரீலஸ்ரீ - ஆறுமுகநாவலரவர்கள்

மாணாக்கராகிய

பண்டித

# தர்க்ககுடார தாலுதாரியவர்கள்

மொழிபெயர்த்தியற்றிய

# தர்க்காமிர்தம்.



இது

பேரையூர் சமஸ்தானம்

## முத்துவிஜய ரெகுநாத தும்பையசாமி
## தும்பிச்சி நாயக்கரவர்களால்

சென்னப்பட்டணம்,

ஸ்ரீதயாநிதி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

தாரண ௵ தை ௴.



இதன்விலை அணா ௮.

சிவமயம்.

# உபோற்காதம்.



பூதலத்தின்கண் மேலாகிய மானுட தேகம் எடுத்ததனுல் உண்டாகும் பிரயோசனம் சித்தாந்த சாத்திரம் வேதாந்த சாத்திரங்களைக் கற்று உற்பத்தி லய ரகிதராகிய சிவ பிரானது சரணாரவிந்தத்தை யடைந்து நித்தியானந்த முறுதலே யாம். அச் சாத்திரங்களைக் கற்றற்கு இரு நேத்திரங்களை நிகர்ப்பன அர்த்த நிச்சயஞ் செய்யுந் தருக்கமும் பத நிச்சயஞ் செய்யும் இலக்கணமும் என்னும் இரண்டுமேயாம். இது பற்றி யன்றே தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனுரும், மறை ஞான சம்பந்த சிவாசாரியரும், ஔவை யாரும் "எண்ணென்ப வேனை யெழுத் தென்ப விவ் விரண்டுங் - கண்ணென்ப வாழு முயிர்க்கு" எனவும், எண்ணு மெழுத்துங் கண்ணிவை யாய்ந் திந்நூற் பயனைக் - கண்ணுக காண்பார் நற்கதி" எனவும், "எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகும்" எனவும் திருக்

குறளினும், பரமததிமிர பாநுவினும், கொன்றை வேந்தனினுங் கூறியதூஉம், சகலாகம பண்டிதராகிய அருணந்தி சிவாசாரியரும், மறைஞான சம்பந்த சிவாசாரியரும், சித்தாந்த சாத்திரமாகிய சிவஞான சித்தியினும், பதி பசு பாசப் பனுவலினும், திரி பதார்த்தங்களைக் கூறு முன்னரே அளவை யியலும், பிரமாண வியல்புங் கூறியதூஉ மென்க.

அற்றேல், பரிமேலழகர் முதலாய வுரையாசிரியர்கள் அனைவரும் எண் என்பதற்குக் கணிதநூல் என வர்த்தம் உரைத்திருத்தலாற் றருக்கநூல் எனக் கூறுதல் பொருந்தாதெனின் ;—அற்றன்று, சித்தாந்த சாத்திரம் வேதாந்த சாத்திர முதலிய வற்றைக் கற்றற்குக் கணித நூல் அணுவளவேனும் பிரயோசனப்படுவ தன்றாகலானும், எண்ணென்பது தருக்கநூல் என்பது "காண்ட லநுமானங் கதை யருத்தாபத்தி யிவை - யீண்டிசைந்த வெண்ணெனவே யெண்" எனவும், "எண்காண்டலாதி" எனவும் வரும் பரமத திமிர பாநு இறைவனூற் பயன் என்னும் நூல்களின் கண்ண வாகிய வாக்கியங்களானே நிச்சயிக்கப் படுதலானும் என்க.

இவ்விரு நூல் களையுங் கல்லாதோன் றனது மூட புத்தியாற் சித்தாந்த சாத்திர முதலிய வற்

றைக் கற்க முயன்றவழி ,அந்தகன் கோலாற் றடவி நடக்க முயன்றுழிக் குழி முதலியவற்றின்கண் வீழ்ந்து வருந்துத லன்றித் தான் அடைய விரும்பிய தானத்தையும் அடையாத வாறு போல, மித்தியார்த்தத்தை யுணர்ந்து நிரய முதலியவற்றின்கண் வீழ்ந்து வருந்துதலன்றித், தான் உணர விரும்பிய தத்து வார்த்தத்தையும உணர மாட்டானன்றே !! ஆதலாற் றருக்கம் இலக்கணம் என்னும் இரண்டும் எல்லாராலும் ஆவசியகங் கற்றற் பாலனவே இதனை " இல்லான் கண் கோலால் வழியியங்கல் போலுமே—கல்லா னூலாயுங் கருத்து." என்னும் பரமத திமிர பானுவின் கண்ணதாகிய செய்யுளானும் உணர்க.

அவற்றுள்ளும் தருக்கநூல் அர்த்த நிச்சயஞ் செய்தலானும், போதன சத்தியை விருத்தி செய்தலானும், கற்று வல்லாரது அவைக் களத்தின்கண் அஞ்சாது பேசுதற்கு முக்கிய வாற்றலை யளித்தலானும், தன்னை யுடைய வவ் வொரு பாஷையின் கண்ணன்றி எவ்வகைப் பாஷையின் கண்ணும் பிரயோசனத்தைக் கொடுத்தலானும், வீட்டிற்கு நேரே காரணமாயிருத்தலானும், உலகத்தின்கட் சிறப்பினரை முன் வைத்தன் மரபாதல் நோக்கி ஆன்றோரனைவரும் எண்ணை முதற்கட் கூறுதலானும்,

இலக்கணநூல் அர்த்த நிச்சயஞ் செய்யாமை யா
னும், போதனு சத்தியை விருத்தி செய்யாமை யா
னும், கற்று வல்லாரது அவைக் களத்தின்கண்
அஞ்சாது பேசுதற்கு முக்கிய வாற்றலை யளிக்கா
மை யானும், தன்னையுடைய வவ்வொரு பாஷை
யின் கண்ணன்றி மற் றெவ்வகைப் பாஷையின்
கண்ணும் பிரயோசனத்தைக் கொடுக்காமை யா
னும், வீட்டிற்கு நேரே காரண மாகாமை யா
னும், உலகத்தின்கட் சிறப்பினரைப் பின் வைத்
தன் மரபாதல் நோக்கி ஆன்றோரனைவரும் எழுத்
தை யிறுதிக்கட் கூறுதலானும் இலக்கண நூலி
னுந் தருக்க நூலே சிறப்புடைத்தாகலான் அத
னையே யெல்லோரும் அத்தி யாவசியகங் கற்றல்
வேண்டும்.

தருக்க நூல் பல வழங்குதற்கும் அவற்றை யிய
ற்றினர் பலர்க்கும் உறைவிடமாயும் உள்ள உத்தர
தேச வாசியும், கௌதமர் கணாதர் முதலிய விருடி
களான் இயற்றப்பட்ட நியாயம் வைசேடிக முதலி
ய நூல்களையும், அவற்றின் வழிநூல்களையும் நன்
குணர்ந்தவருமாகிய சகதீச பட்டாசாரியர் பாலர்க
ள் எளிதின் உணர்ந்து கொள்ளுவான் அவற்றின்க
ண் உள்ள பொருளைச் சுருக்கித் திரவிய நிரூப

ணம், குணநிரூபணம், கரும நிரூபணம், சாமானி
ய நிரூபணம், விசேட நிரூபணம், சமவாய நிரூப
ணம், அபாவ நிரூபணம், பிரத்தியக்க நிரூபணம்,
அநுமான நிரூபணம், உபமான நிரூபணம், சத்த
நிரூபணம் எனப் பதினேர் நிரூபணங்களாக்கித்,
தருக்காமிர்தம் எனப் பெயர் தந்து சம்ஸ்கிருத பா
ஷையில் இயற்றினர்.

யாழ்ப்பாணத் துள்ள திருநெல் வேலியின் கண்
அவதரித் தருளிக் கௌட தேசத்தைச் சென்று வி
யாகரணந், தருக்கம், மீமாஞ்சை, வேதாந்த முத
லிய சாத்திரங்களைக் கற்றுப் பௌஷ்கரம் சிவஞா
னபோத முதலிய சைவாகமங்கட்கு வியாக்கியான
மும், பிரமாணதீபிகை, பிராசாததீபிகை, சிவயோ
க சாரம் முதலிய நூல்களும் இயற்றிய சிவானுபூ
திமானகிய ஞானப்பிரகாச சுவாமிகளது மரபின்
கண் உதித்த வரும், யாழ்ப்பாணத்து நல்லூரின்
கண் அவதரித்துச் சம்ஸ்கிருதம் திராவிடம் என்
னும் இரு பாஷையின் கண்ணும் அதி பாண்டித்
திய மடைந்து, சைவ சித்தாந்த சாத்திரங்களைக்
கற்றுணர்ந்து, அதனற் சிவபிரானே பரம் பொ
ருள் எனத் துணிந்து, இந்தியாவின் கண்ணும் இல
ங்கையின் கண்ணும், சைவ சித்தாந்த சமய மாகிய

சுவமத தாபனமும், பரமத நிராகரணமுஞ் செய் தருளிய சிவஞானச் செல்வராகிய ஸ்ரீலஸ்ரீ ஆறு முக நாவலரவர்கட்கும் மாணுக்கரும், அந்நாவல ரவர்களது, சிதம்பர தலத்தின் கண்ணதாகிய, சைவப்பிரகாச வித்தியா சாலையிற் றலைமை யுபாத்தி யாயரா யிருந்தவரும், இலக்கியம், இலக்கணம், தருக்கம், சித்தாந்த சாத்திர முதலிய வற்றின் கண் அதிபாண்டித்தியம் உண்மையான் உலோகோபகா ரமாகக் கிறிஸ்து மதகண்டனமாகிய வேதாகம நாமவாத தீபிகை வைஷ்ணவமத கண்டனமாகிய நாராயண பரத்துவ நிரசன முதலிய நூல்களை இயற் றினவருமாகிய பண்டித ஸ்ரீ தர்க்க குடார தாலு தாரி என்பவர் சமஸ்கிருத பாஷையிற் போலத் திராவிட பாஷையிற் றருக்க நூலும் யோக நூலு ம் அதிகம் இல்லாமையை யுணர்ந்து, முதலிற் றிராவிட பாஷையைக் கற்குஞ் சிறுவர்கட்கு உபயோக மாகும் பொருட்டு அத் தர்க்காமிர்தத்தை மொழி பெயர்த்து, பெரும்பான்மையும், எல்லாவற்றிற்கு ம் இலக்கணமும், அவற்றுள்ளும் விசேடமா யுள்ளன வற்றிற்கு அவ்வியாத்தி முதலிய தோட பரிகாரமும், ஆண்டாண்டு வேண்டப்படு மிடத்து அவ்வம் மதத்தினர் கோட்பாடுகளும், அவற்றின் கண்ட

ஙங்களும், சேர்த்துப் பெரும்பாலும் வேண்டப்ப டா தனவற்றை நீக்கி இயற்றினர்.

அம்மொழி பெயர்ப்பு எல்லார்க்கும் பெரிதும் பயன்படுதல் பற்றிக் கடினமாகிய தர்க்க சங்கேத பதங்கட்கு அர்த்தம் எழுதி அதனுடன்சேர்த்து யா ன் அச்சிடுவித்தனன்.

"எண்ணெழுத்திகழேல்."

இங்ஙனம்,

| தாரணஹு கார்த்திகைமீ உ௦உ. | பேரையூர் - முத்துவிஜயரெகுநாத தம்பையசாமி தும்பிச்சி நாயக்கர். |
|---|---|



உ

சிவமயம்.

# சிறப்புப் பாயிரம்.



யாழ்ப்பாணத்துச் சுன்னைநகர்
பண்டிதராகிய
ம-ா-ா-ஸ்ரீ, ஷ. முருகேசப்பிள்ளையவர்கள்
இயற்றியது.



பொன்னாடென்றிமையவரும் புவியினிடைவரத் தனது பொலிவானன்றிச், சொன்னாடுபெயரானுந் தொலைவிலருந் தலைமைபெறத் தோன்றிச்சூல, மின்னாடுகரத்தெந்தை மிகமகிழுந்திரிகூட முதலமேவிச், சென்னாடுகதிர்காம முதற்பலசெவ்வேளிடமுந் திகழ்வதீழம்.
(க)

ஈழமெனுமப்பதியி விலங்குமமராவதிநே ரெழிலதாகி, வேழமுரிதரித்தநகு லேசனருளாலருள்சேர் வீணாபாணி, சோழனுத வருங்குடிக டொகவரசாண் முறைமையிற்பேர் சொல்லப்பெற்றுப், பாழதெனும்பரசமயம் பாற்றியிலங்குறுவ தியாழ்ப்பாணநாடு.
(உ)

நாடியவந்நாடதனி லுடருஞ்சீர்ச்சுதன்மையென
நணுகுஞ்செல்வ, நாடியநல்லிந்திரனு மிகவளர்க்
கும்பெருங்குலத்து நல்லோருண்மை, நாடியருந்
தமிழ்பாடும் புலவரொடு மரசிருக்குநன்மைமேவி,
நாடியவுண்மறைநூலு நல்லசிவாகமநூலு நவிலு
நல்லை. (௩)

நல்லறத்தின் வடிவெனவந் நகரின்வருமாறுமுக
நாவலப்பேர், வல்லவனின் மரபினிற்சேர் வயிரமு
த்துவேள்பலநாள் வருந்திச்செய்த, செல்வநெடுந்
தவப்பயனாய்ச் சிறுகாலை யாழ்ப்பாண தேசமெங்
கும், வெல்கிரிமேற்றீபமெனத் தமிழ்க்கலைகள் பல
கற்று மிளிர்ந்தானன்றே. (௪)

அன்றெதிரிங் கொருவருமற் றிவற்கெனச் செந்
தமிழ்க்கலைக ளமையக்கற்ற, பின்றையுயர்வடமொ
ழியிற் றருக்காதிபலநூலும் பேணியாய்ந்து, வென்
றியுரை வடமொழியிற் றென்மொழியிற் சிவநூற்கு
விரித்துச்செய்த, தன்றமருள் வருஞானப் பிரகாச
முனிவனெனத் தானுமோங்கி. (௫)

ஓங்காரப் பொருளாதி யொருமூன்று பொருளி
னையு முணரத்தக்க, பாங்கானதமிழ்மொழியிற் றரு
க்கநூல் பலகாணுப் பரிசுநோக்கி, நீங்காதநினைவி
னொடு தான்கற்ற பலதருக்க நெறியுளோபின், வாங்

காதமதியினிற்றர்க் காமிருதமெனு நூலை வனப்பு வாய்ப்ப. (சு)

வாரிநெடுங் கடலுலகிற் கொருநயனம் வகுப்ப தென வளமைசான்ற, சூரிநெடுந் தமிழ்மொழியின் மொழிபெயர்த்தான் றன்பெயரை மூற்றுந்தூக்கி, கூரியநுண் மதியினருங் குதூகலிக்க வெழுந்தர்க்க குடாரதாலு, தாரியென வுரைக்குமொரு திருஞான சம்பந்தன் றவத்தோரேறே. (எ)

தவம்பிறிதில் லெனச்சிலரே யிதுகண்டு மகிழ் காலைத்தமிழ் நாடெங்கும், அவஞ்சிறிது மணுகாம லரசாண்ட தமிழ்மாறனுமென்றேதச், சிவந்தழுவி யுவந்தவெழிற் பேரையூர் செய்ததவச் செய்கையா லே, நவந்தழுவி யெழுகிர்த்திக் கொழுந்தோடி யெ த்திசையு நடக்கத்தோன்றி. (அ)

தோன்றிநிகர் கரத்துமட நல்லார்கண் மடலெழு தச் சுடலையாடி, யான்றவழல் விழியதனி லழியாத மாரனென வழகுவாய்த்து, சான்றவறி விணுதி சேடனென வெக்கலையுந் தமிழிற்கற்று, மூன்றே னு மச்சங்கமென வெல்லோருங் கொண்டாடு மு தல்வனுகி. (கூ)

வன்னத்தி னிதிபடைத்த சொன்னத்தன் வடக் கெய்தி மலயமீன்ற, கன்னிச்செந்தமிழ் கேட்டுக்

களிகூர்ந்து வாழும்வகை கருதிச் செல்வ, மன்னந் தென்பால்முத்து விஜயரகு நாதனெனுமாறனாகித், துன்னத்தன் கிளேயோடும் வந்ததென விருநிதியஞ் சூழவெய்தி. (க0)

எய்தியநற் கல்விசெல்வ மிரண்டானு முயர்ந்தவி வனிளமைத் தொன்மை, செய்தரசாள் செமிந்தா ராய் எவர்களுக்கும் நன்மைசெயூச் சிறந்துவாழ்நா ள், பொய்தவிரச் செய்ததர்க்கா மிருதமெனு நூல தனைப் புகழ் யாழ்ப்பாணம், செய்தபெருந் தவமெ னநல்லூர்வாழுஞ் சபாபதிவேள் செப்பமாதோ.()

மாதங்கந்தழுவியொரு மாதங்கவரையெடுத்த ம கேசற்காக, ஆதங்க மகற்றும்வகை புரிதனியை பதி ட்டையினு லமைக்குமா போல், ஓதங்கத் தொன்றெ னவந் துறுமிதனைப் பலரு முணர்ந் துய்யும்வண்ண ம், ஏதங்கை யறவுபடா தச்சியற்றிப் பகிரங்கத் தே ற்றினனே. (கஉ)



# சூசீபத்திரம்.



திருச்சிற்றம்பலம்.

# தர்க்காமிர்தம்.

## பதிவணக்கம்.

அகிலமும்பரசவருள்புரியெகின
வாகனனுதிகோதமரர்
உகவகவிருத்திக்கிடமதாய்ச்சருவ
வுலகையும்பரிக்குமாதவனின்
சகமதிற்சனனபீதிசாடுதற்கோர்
பீசமாஞ்சரோருகசரணம்
அகமெனுங்கமலநிறுவியேயறைவ
னரியதோர்தருக்கமாமமிர்தம்.

## ஆரம்பம்.

"ஆன்மாவானவன் தரிசிக்கத்தகுந்தவன் கேட்கத்தகுந்தவன் எண்ணத்தகுந்தவன் தியானிக்கத்தகுந்தவன்" என்று சுருதி கேட்கப்படுகின்றது. இதன் அர்த்தம் வீடு பேற்றின்

அவா மிக்குடையோனுல் ஆன்மா பார்க்கத் தகுந்தவன் என்பது. முமூட்சுவிற்கு ஆன்ம தரிசனம் இட்டசாதனம் என்பது தாற்பரியம். ஆன்மதரிசன வுபாயம் யாது என்பதற்கு விடை கூறுகின்றூர், கேட்கத்தகுந்தவன் என்பது முதலியவற்ருன். அவ்வார்த்தக்கிரமத்தானே சத்தக் கிரமம் விடப்படுகின்றது, "அழலின் ஓமிக்கின்ருன் அடிசிலை அடுகின்ருன்" என்பது முதலியனபோல. எனவே கேட்டல் சிந்தித்தல் தியானித்தல்கள் தத்துவஞானத் திற்குக் காரணங்களாகின்றன. ஈண்டுச் சுருதியான் இயற்றப்பட்ட வான்மாவின் சிரவணத் திற்கு மனனத்தின்கண் அதிகாரம். மனனமும் ஆன்மாவிற்கு இதர பின்னத் தன்மையானே யநுமாநம். அதுவும் பேதப் பிரதியோகியாகிய இதரஞானத்தினுனே சாதிக்கத்தகுந்தது. அங்ஙனமாயின் இதரமென்றுரைக்கப்பட்டன யாவை? அவற்றியல் பென்னை? என்னும் ஆசங்கை நீக்குதற் பொருட்டன்றே பதார்த்தஞ் சுருக்கி யுரைக்கப்படுகின்றது.

## பதார்த்தம்.

வாச்சியத்தன்மையாதல் ஞேயத்தன்மையாதல் பதார்த்த சாமானியத்திற் கிலக்கணம். சாமானியமாய் பதார்த்தம் பாவ பதார்த்தம் அபாவபதார்த்தமென இருவகைத்து.

அவற்றுட் பாவபதார்த்தத்திற் கிலக்கணம் சமவாயம் சுவசமவாயி சமவேதத்துவம் என்னும் இருவகைச்சம்பந்தத்துள் ஒருசம்பந்தத்தானே சத்தையாகிய சாதியுடைமை. அது திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம் என்னும் வேறுபாட்டான் அறுவகைத்து. ஈண்டுத் திரவியத்தன்மை, குணத்தன்மை, கன்மத்தன்மை சாதி. ஏனைய சாமானியத்தன்மை முதலாயின உபாதி.

## திரவியம்.

குணத்திற் காசிரயமாயுள்ளது திரவியம். முதற்கணத்திற்றோன்றி அழிவுபடுங்கடத்தின் கட் குணமின்மையின் ஆண்டு அவ்வியாத்தி வருதலான், திரவியத்தன்மை யுடையதெனினுமாம். அத்திரவியம் பிருதிவி, அப்பு, தேயு,

வாயு, ஆகாயம், காலம், திக்கு, ஆன்மா, மனம் எனவொன்பது வகைத்து. அவற்றுள் ஆகாயத்தன்மை, காலத்தன்மை, திசைத்தன்மை உபாதி. ஏனையன சாதி.

## குணாசிரயப்பிரக்கிரியை.

அவற்றுட் பிருதிவியில், உருவம், இரதம், கந்தம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம், திரவத்துவம், வாசனையெனப்படும் பதினான்கு குணங்கள் உள்ளன.

அப்புவில் உருவம், இரதம், சிநேகம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம், திரவத்துவம், வாசனை யெனப்படும் பதினான்கு குணங்கள் உள்ளன.

தேயுவில் உருவம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், திரவத்துவம், சம்ஸ்காரம் எனப்படும் பதினோர் குணங்கள் உள்ளன.

வாயுவிற் பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், சம்ஸ்கார மெனப்படும் ஒன்பது குணங்கள் உள்ளன.

ஆகாசத்திற் சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், சத்தம் எனப்படும் அறுகுணங்கள் உள்ளன.

காலத்திலுந் திக்கிலும் சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், என்னும் ஐந்து குணங்கள் உள்ளன.

சீவான்மாவிற் சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், தர்மம், அதர்மம், பாவனை யெனப்படும் பதினான்கு குணங்கள் உள்ளன.

பரமான்மாவிற் சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், ஞானம், இச்சை, முயற்சி என்னும் எட்டுக்குணங்கள் உள்ளன.

மனத்திற் சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், சம்ஸ்கார மெனப்படும் எட்டுக்குணங்கள் உள்ளன.

இதற்குச்செய்யுள்.

காற்றிற்கொன்பதுகனலினுக்குப்பதினொன்றும்
ஏற்றமாகியபிருதிவியணுவிற்கேழிரண்டு
சாற்றுதிக்கொடுகாலத்திற்கைந்துசட்காயம் [ர்.
போற்றுமம்மனக்கீசற்கெண்குணமெனப்புகல்வா

இனி நவீனர் ஈசுரனிடத்துப் பரிமாணமுண்மையிற் பிரமாண மின்றென்றும், ஈசுரன் திரவியமன்மையிற் சையோக விபாகங்களும் அவன்மாட் டின்றென்றும், பிரதத்துவம் குணமென்பதற்கட் பிரமாண மின்றென்றும், பின்னர் சங்கை, புத்தி, இச்சை, யத்தநம், சுகம், என்னு மைந்தே ஈசுரன் மாட்டுக் குணமென்றுங் கூறுப.

## திரவியங்களின் இலக்கணம்.

பிருதிவிக்குக் கந்தமுண்மையும், அப்புவிற்குக் குளிர்ந்த பரிசமுண்மையும், தேயுவிற்குச்

சுடும் பரிசமுண்மையும், வாயுவிற்கு உருவ மின்றிப் பரிசமுண்மையும், ஆகாயத்திற்குச் சத்தகுண முண்மையும், காலத்திற்குப் பூத முதலிய விவகாரத்திற் கேதுவாதலும், திக்கிற் குப் பிராசியாதிய விவகாரத்திற் கேதுவாத லும், ஆன்மாவிற்கு ஞானத்திற்கு அதிகரண மாதலும், மனத்திற்குச் சுகமுதலிய அநுப வத்திற்கேதுவாதலும், இலக்கணங்களாம்.

## திரவியங்களின் விபாகம்.

அவற்றுட் பிருதிவி, அப்பு, தேயு, வாயு வென்னும் நான்கும் பரமாணு சாவயவமென இருவகைப்படும். ஆகாயம், காலம், திக்கு, ஆன்மா வென்னும் நான்கும் விபுரூபங்கள். மனம் அணுரூபம். விபுத் தன்மை யாவது சர்வ மூர்த்தத் திரவிய சம்யோகித்தன்மை. ஈண்டுச் சாவயம் அநித்தியம். ஏனையன நித் தியம்.

சாவயவமும் மூவகைத்து, சரீரம், இந்திரி யம், விடயம் என்னும் வேறுபாட்டான்.

## சரீரம்.

அவற்றுட் சரீரமாவது ஆன்மாவினது போகத்திற்கு ஆசிரயமாயுள்ளது. போகம் இன்பதுன்பங்கள் புலப்படத்தோன்றல். மாநுடசம்பந்தமான பார்த்திவ சரீரம் பூலோகத்தின் கண்ணும், சலீய சரீரம் வருணலோகத்தின் கண்ணும், தைசச சரீரம் ஆதித்தியலோகத்தின் கண்ணும், வாயவீய சரீரம் வாயுலோகத்தின் கண்ணும், பிரசித்தமாமென்க.

## இந்திரியம்.

இந்திரியமாவது சத்தமல்லாத உற்பூதவிசேட குணங்கட்கு அநாசிரயமாய், ஞானத்திற்குக் காரணமாகிய மனசம்யோகத்திற்கு ஆசிரயமாயது. கிராணேந்திரியம் பிருதிவி சம்பந்தம். இரசனேந்திரியம் சலசம்பந்தம். சக்ஷுரிந்திரியம் தேசசு சம்பந்தம். துவக்கிந்திரியம் வாயுசம்பந்தம். சுரோத்திரேந்திரியம் முறுக்கை நிகர்த்த காதோடு கூடிய ஆகாசத்தின் பிரதேசம். இவற்றின் றொழில் முறையே கந்தத்தையும், இரசத்தையும், உருவத்தை

யும், பரிசத்தையும், சத்தத்தையும் கிரகித்த
லும், இவற்றினிடங்கள் நாசிநுனி, நாநுனி,
கண்ணுறை கருமணிநுனி, சர்வசரீரம், காது
களுமாம். இவ்விந்திரியங்களைந்தும் புறவிந்
திரியங்கள் எனவும் பகிரிந்திரியங்களெனவும்
படும். மனம் அக விந்திரியம். இது அந்தரிந்
திரியமெனவும் படும். இதனோடு இந்திரியம்
அறுவகைத்து.

## விடயம்.

சரீரமும் இந்திரியமும் அல்லாத அனைத்
தும் விடயமெனப்படும். மிருத் பாடாணமுத
லியன பார்த்திவ விடயமெனவும், நதிசமுத்
திர முதலியன சலீய விடயமெனவும், வன்னி
சுவண முதலியன தைசச விடயமெனவும்,
விருக்க முதலியவற்றின் கம்பனத்திற் கேது
வாயவீய விடயமெனவும் படும்.

## ஆன்ம விபாகம்.

ஆன்மா, சீவான்மா, பரமான்மா வென விரு
வகைத்து. அவற்றுட் சீவான்மாவிற்குச் சுக
முதலியன வுடைமை யாதல், அநித்தமான

ஞான முடைமையாதல் இலக்கணம். பர மான்மாவில் அதிவியாத்தி நீக்கற்பொருட்டு அநித்த மெனப்பட்டது. சீவான்மா சரீரந் தோறும் வெவ்வேறாய் பந்த மோக்க யோக்கி யரா யுள்ளார். பரமான்மாவிற்கு நித்தமாகிய ஞானத்திற் கிடமாதல் இலக்கணம். சீவான்மா வில் அதிவியாத்தி நீக்கற்பொருட்டு நித்த மெனப்பட்டது. பரமான்மா ஈசுரனே.

## பிரத்தியக்க அப்பிரத்தியக்க திரவியம்.

பரமாணுக்களும் துவியணுகங்களும் அப் பிரத்தியக்கங்கள். மகத்தாகிய உற்பூத வுரு வத்தையுடைய பிருதிவி சலம் வன்னி யென் பன புறவிந்திரியங்களாற் றோன்றும் லௌகி கப் பிரத்தியக்க விடயங்கள். ஆன்மா மானதப் பிரத்தியக்கமாயது. வாயு, ஆகாசம், காலம், திக்கு, மனம் என்பன அப்பிரத்தியக்கங்கள்.

புறத்திரவியப் பிரத்தியக்கத்தைக் குறித்து மகத்துவத்தோடு விசிட்டமாகிய உற்பூத வுரு வத்தன்மை பிரயோசகம். பரமாணுதுவியணு

கங்களின் அதிவியாத்தி நீக்குதற் பொருட்டு மகத்துவமும், கிராணேந்திரிய முதலியவற்றின் அதிவியாத்தி நீக்குதற்பொருட்டு உற்பூதத் தன்மையும், வாயுவின் அதிவியாத்தி நீக்குதற் பொருட்டு உருவத்தன்மையும் இடப்பட்டன.

## திரவியோற்பத்திப் பிரக்கிரியை.

உற்பத்தி காரணமுடையதற்கே உளது. காரணம் அந்நியதாசித்தி சூனியமாய், நியதமாய், பூர்வ விருத்தியாயது. அத்தன்மை காரணத்தன்மை. அக்காரணம் சமவாயிகாரணம், அசமவாயிகாரணம், நிமித்தகாரணமென மூவகைத்து.

அவற்றுள், எதன்கட் சமவேதித்துக் காரியந் தோன்றும் அது சமவாயிகாரணம். இது முதற்காரணமெனவும் ஆதிகாரணம் எனவும் பெயர்பெறும்; எங்ஙனம்:—துவியணுகத்திற்குப் பரமாணு, கடத்திற்குக் கபாலம்.

சமவாயி காரணத்திற் சம்பத்தமாகிய காரணம் யாது அது அசமவாயிகாரணம். அது இருவகைத்து.

முதலது காரியத்தோடு கூட ஒரு பொருளிற் சமவேதித்துக் காரணமாயிருப்பது. எங்ஙனம் :— துவியணுகத்திற்குப் பரமாணுத்துவய சம்யோகம். கடத்துக்குக் கபாலத்துவய சம்யோகம். கபாலத்துவய சம்யோகமானது காரியமாகிய கடத்தோடு கூடச் சமவாய சம்பந்தத்தானே கபாலமாகிய சமவாயி காரணத்தின் கண்ணிருந்து கடத்தைத் தோற்றுவித்தலின் அசமவாயிகாரணமாயிற்று.

ஏனையது காரணத்தோடு கூட ஒரு பொருளிற் சமவேதித்துக் காரணமாயிருப்பது. எங்ஙனம் :—துவியணுக் ரூபத்திற்குப் பரமாணு ரூபம். கடரூபத்துக்குக் கபாலரூபம். ஈண்டுக் காரணமாவது தனது காரியத்தின் சமவாயிகாரணம். கபால ரூபமானது தனது காரியமாகிய கடரூபத்திற்குச் சமவாயிகாரணமாகிய கடத்தோடு கூடச் சமவாய சம்பந்தத்தானே கபாலமாகிய சமவாயி காரணத்தின்கண் இருந்து கடரூபத்தைத் தோற்றுவித்தலின் அசமவாயி காரணமாயிற்று.

சமவாயிகாரணம் அசமவாயிகாரணம் என்னும் இரண்டன் வேறாகிய காரணம் யாது அது நிமித்தகாரணம். எங்ஙனம்:—துவியணுகத்திற்கு ஈசுரன். கடத்திற்குக் குலாலன்.

பாவகாரியத்திற்கு மாத்திரம் இம்மூவகைக் காரணங்களும் உள்ளன. ஆண்டுச் சமவாயிகாரணம் யாண்டுந் திரவியமே யாகும். திரவியத்தைக் குறித்து அவயவ சம்யோக முதலிய குணங்களும், காரியங்களி னிருக்குங் குணத்தைக்குறித்து சமவாயி காரணத்தின்கண் இருக்கும் சுக்கிலரூப முதலாகிய குணங்களும், சம்யோக விபாகங்களாகிய குணத்தைக் குறித்து கர்மங்களும் அசமவாயி காரணங்களாம். காரிய மாத்திரத்தைக் குறித்து ஈசுரனும், அவனது அறிவிச்சை முயற்சிகளும், பிராகபாவமும், காலமும், திக்கும், அதிட்டமும், சாதாரண காரணங்களாம்.

ஆண்டு ஈசுரனது இச்சை வயத்தாற் பரமாணுக்களிற் கிரியை யுண்டாம். அதனாற் பரமாணுத்துவயங்கள் சேர்ந்து துவியணுகங்கள்

தோன்றும். துவியணுகங்கண் மூன்று சேர்த
லாற் றிரிசரேணுத் தோன்றும். இங்ஙனமே
சதுரணுக முதலியன முறையானே தோன்ற
லின் அந்தியா வயவிகளாகிய மகா பிருதிவி
மகாசலம் மகாதேயு மகாவாயுக்க டோன்றும்.

## திரவியப்பிரமாணப் பிரக்கிரியை.

பிரத்தியக்க திரவியத்தைக்குறித்துப் பிரத்
தியக்கமும் அதீந்திரிய திரவியத்தைக்குறித்து
அநுமாநமும் பிரமாணம். அதுவும் உத்தே
சியம், விதேயம், இலிங்கம், திருட்டாந்தம்
என்பவைகளாற் சாதிக்கத்தக்கது. அவற்றின்
விசேடம் அநுமாந நிரூபணத்திற் கூறப்படுத
லின் ஈண்டுக்கூறிற்றிலம்.

பரமாணு துவியணுகங்கட்குப் பிரமாணம்
எங்ஙனம்:—திரிசரேணு அவயவத்தோடு கூ
டிய திரவியத்தானே ஆக்கப்பட்டது, புறவிந்
திரியத்தானே உணரப்படுந் திரவியத்தன்மை
யான். புறவிந்திரியத்தான் உணரப்படுந் திரவி
யத்தன்மை யாது அது அவயவத்தோடுகூடிய
திரவியத்தான் ஆக்கப்பட்டது. கடம்போலும்.

ஈண்டுத் திரிசரேணு உத்தேசியம்; அவயவத்தோடு கூடிய திரவியத்தான் ஆக்கப்படுந் தன்மை விதேயம்; புறவிந்திரியத்தான் உணரப்படுந் திரவியத்தன்மை இலிங்கம்; கடந் திருட்டாந்தம்; இதனாற் றுவியணுகமும் பரமாணுவும் சித்தித்தன. வேத்திய மானமாகிய ஆன்மாவின்கண் வியபிசார நீக்குதற்பொருட்டுப் புறமென் பதமும், உருவத்தன்மை முதலியவற்றின் வியபிசார நீக்குதற்பொருட்டுத் திரவியமென்பதமும் இடப்பட்டன.

வாயுவுண்மை பரிசத்தான் அநுமிக்கப்படும் மிங்ஙனமன்றோ? வளியுளரும்வழி அநுட்டணா சீதஸ்பரிசம் புலப்படுமன்றே; அப்பரிசம் ஒருதிரவியத்தை ஆசிரயித்து நிற்கும், உருவம்போற் குணமாகலான். அதற்கு ஆசிரயம் பிருதிவி என்றல் பொருந்தாது, உற்பூதப் பரிசமுடைய பிருதிவிக்கு உற்பூத உருவமுடைமை நியமமாகலான்; சலதேயுக்களு மன்று, சீதஸ்பரிசமும் உட்டண ஸ்பரிசமும் இன்மையான்; ஆகாசம், காலம், திக்கு, ஆன்மாக்களா

கிய வியாபகப்பொருள் நான்குமல்ல, அவற்றுள் ஒன்றன் குணமாயின் யாண்டும் புலப்படுக வெனல் வேண்டுதலான்; மனமுமன்று, பரமாணுவின் பரிசம் அதீந்திரிய மாகலான்; ஆகலின், அநுபவிக்கப்படும் பரிசத்திற்கு ஆசிரயம் யாது அதுவே வாயுவென்றுணர்க.

ஆகாசத்திற் பிரமாணம் எங்ஙனம்:—"சத்தம் விசேடகுணம், நேத்திரத்தின் கிரகணத்திற்கு அயோக்கியமாயும் புறவிந்திரியத்தாற் கிரகிக்கப்படுவதாயும் உள்ள சாதி உண்மையான், பரிசம் போலும்." என்னும் வாக்கியத்தாற் சத்தம் விசேடகுணம் என்பது சித்தித்த வழி, "அச்சத்தம் ஒரு திரவியத்தை ஆசிரயித்து நிற்கும், குணத்தன்மையாற் சையோகம் போலும்." என்னும் அநுமானத்தானே அதற்குத் திரவிய சமவேதத்தன்மை சித்திக்குமன்றே; அதற்கு ஆசிரயம் பிருதிவி அப்பு தேயுவென்பது பொருந்தாது, அக்கினி சையோகத்தை அசமவாயி காரணமாகப் பெருதலைப் பார்க்கினும் பின்னமாயும், காரண

குணத்தானே தோன்றுததாயும், பிரத்தியக்க மாயும் இருத்தலான்; திக்கு, காலம், மனங்களுமன்று, விசேட குணமாகலான்; ஆன்மாவுமன்று, புறவிந்திரியத்தாற் கிரகிக்கப் படுதலான்; ஆகலான், அநுபவிக்கப்படும் சத்தத்திற்கு ஆசிரயம் யாது அதுவே ஒன்பதாந்திரவியமாகிய ஆகாசமெனச் சித்தித்த தென்க.

காலத்திற் பிரமாணம் எங்ஙனம்:—காலிகம் தைசிகம் எனப் பரத்துவமும் அபரத்துவமும் இருவகைத்து. அதிக சங்கியாகமாகிய சூரியனது கிரியையோடு கூடிய சரீரம் என்னும் ஞானத்தாற் பரத்துவமும், அற்ப சங்கியாகமாகிய சூரியனது கிரியையோடு கூடிய சரீரம் என்னும் ஞானத்தான் அபரத்துவமும் உண்டாகின்றன. அப்பரத்துவம் சேட்டத்தன்மை. அபரத்துவம் கனிட்டத்தன்மை. அதன் அநுமானம் எங்ஙனம்:—இந்தப் பரத்துவத்திற்குக் காரணமாகிய அதிக சங்கியாகமாகிய சூரியனது கிரியையோடு கூடிய சரீர ஞானம் பரம்பரா சம்பந்தத்திற் கடகமாகிய வஸ்துவிடய

கம், சாட்சாத் சம்பந்த மில்லாத விசிட்ட ஞா னத்தன்மையான்; செம்படிகம் என்னும் ஞா னம்போலும். பரம்பரா சம்பந்தமாவது தன து சமவாயி சம்யுக்த சையோகம். தனது என் பது சூரிய கிரியை, அதன் சமவாயி சூரியன், அதன் சையுக்தம் காலம், அதன் சையோகம் பிண்டத்தின்கண் என்க. அதனானே சம்பந்த கடகம் காலமெனச் சித்தித்த தென்க. அற் றேற், காலம், பூதம், பவிடியம், வர்த்தமானம் என்னும் பேதத்தானே அநேகமாகலின் ஏகத் துவம் எங்ஙனமெனின், உபாதிபேதத்தானே பேதஞானம் உண்டாகலான். இரவிக் கிரியா ரூபங்களாகிய காலோபாதிகள் பின்னங்களே.

இங்ஙனம் தைசிக பரத்துவ அபரத்துவங்க ளானே திக்குச் சித்திக்கின்றது. அப்பரத்து வம் தூரத்துவம், அபரத்துவம் சமீபத்துவம். பரத்துவத்திற்குக் காரணமாகிய எல்லையை யபேட்சித்திருக்கும் அதிக சங்கியாகமாகிய சையோகத்தோடு கூடிய சரீரஞானம் பரம் பரா சம்பந்தத்திற் கடகமாகிய வஸ்து விஷய

கம், சாட்சாத் சம்பந்த மில்லாத விசிட்ட ஞா னத்தன்மையான். என்பதனாற் றிக்குச் சித்தித் தது. அற்றேல் ஆகாசமே சம்பந்த கடகமென் னுமோவெனின்;—என்னும், அதற்குச் சத்தா சிரயத் தன்மையானே விசேடிய சனகப் பிர மாண சித்தமாகலின். இரவிக்கிரியை உபநீத பான விடயத்துவஞ் சம்பவித்த லின்றென்க.

"நான் சுகமுடையேன்" என்பது முதலிய பிரத்தியக்கம் சீவான்மா உண்டென்பதிற் பிர மாணம்; அற்றேல், "யான் மனுடன்" "யான் கரியன்" என்று யாண்டும் யான் என்னும் பிர தீதிக்கு விடயமாகலாற் றேகமே ஆன்மா வெ னிற்படும் இழுக்கென்னையெனின்;—அற்றன் று, தேகமே சீவான்மா வென்பார் கரபாதாதி கள் நசித்த வழியும் ஆன்மா நசித்த தெனல் வேண்டு மாகலான், என்க.

சரீரம் கர்த்தாவை யுடையது, காரணத்தன் மையான் வாச்சிபோலும். என்னும் அநுமா னமும் சீவான்மா வுண்மையிற் பிரமாணமெ ன்க.

பரமான்மா உண்டென்பதில் அநுமானம் பிரமாணம். அஃதெங்ஙனம் :—"துவியணு கம் கர்த்தாவை யுடைத்து, காரியத் தன்மை யாற் கடம்போலும்." என்பதனால் ஈசுரனும், அவன் மாட்டுளவாகிய நித்திய ஞாநம், இச்சை, கிருதிகளும், சர்வஞ்ஞத்துவமும், சித்தித்தன. காரியத்தன்மையாவது பிராகபாவத்திற்குச் பிரதியோகியாயும், துவம்சத்திற்குப் பிரதியோகியாயும் உள்ளது. அதனால் துவம்சாபாவத்தில் வியபிசாரமின்று.

பரமான்மா உண்டென்பதில், "இறைவனவான் ஞானமெல்லாம் எல்லாமுதன்மை யநுக்கிரகமெலா மியல்புடையான்." என்றற்றொடக்கத்து சுருதியும் பிரமாணம் என வுணர்க.

மனத்திற் பிரமாணம் எங்ஙனம் :—"சுகமுதலிய பிரத்தியக்கம் இந்திரியத்தாற் றோற்றுவன, இந்திரியப் பிரத்தியக்கத் தன்மையான், கடாதிப் பிரத்தியக்கம் போலும்." என்னும் அநுமானத்தான் இந்திரிய சன்னியத் தன்மைக்கு வியாப்பியமான சன்னியப் பிரத்தியக்கத்

தன்மை யுடைத்து சுகமுதலிய பிரத்தியக்கம் என்னும் பராமரிசானந்தரம், "சுகாதிப்பிரத்தியக்கம் நேத்திராதி யிந்திரியங்களாற் றோற்றுவன வல்ல, அவ்வவ் விந்திரிய அயோக்கிய விடய மாகலான்." என்பதனால் மனோசன்னியத்தன்மை சித்தித்தவழி மனமும் சித்தித்ததென உணர்க.

## திரவிய நாசப்பிரக்கிரியை.

திரவிய நாசஞ், சில்வழி அசமவாயி காரண நாசத்தானுஞ் சில்வழிச் சமவாயி காரண நாசத்தானுந் தோன்றுதலின், இருவகைத்து. அவற்றுள், முதலது எங்ஙனம்:—பரமாணுக்களிரண்டின் சையோக நாசத்தானே துவியணுகத்திற்கு நாசம். இரண்டாவது எங்ஙனம்:—கபால நாசத்தானே கடத்திற்கு நாசம். கடநாசம் சமவாயி காரண நாசம், அசமவாயி காரண நாசம் என்னும் இரண்டானுந் தோன்றுகின்றது. துவியணுக நாசம் அங்ஙனமன்று, அதன் சமவாயி காரணமாகிய பரமாணு நித்திய மாகலான்.

ஆகாசம், காலம், திக்கு, ஆன்மா, பரமாணுக்கள் சமவாய சம்பந்தத்தான் விருத்தியில்லன. பிருதிவி, சலம், தேயு, வாயு, ஆகாசம் என்னும் ஐந்தன்கண்ணும் பூதத்தன்மை உள்ளது. பூதத்தன்மையாவது பகிர் இந்திரியத்தாற் கிரகிக்கப்படும் விசேடகுண முடைமை. பிருதிவி, சலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்தன்கண்ணும் மூர்த்தத்தன்மையும் கிரியையும் உள்ளன. மூர்த்தத் தன்மையாவது கிரியையினதுசமவாயிகாரணதாவச்சேதகதையானே சித்திக்குஞ் சாதி விசேடம்.

பிருதிவி, அப்பு, தேயு, வாயுக்கள் திரவியத்திற்குச் சமவாயி காரணங்கள். காலத்திற்குக் காலிகசம்பந்தத்தானே எல்லாவற்றிற்கும் பற்றுக் கோடாதற் றன்மை. திசைக்குத் தைசிக சம்பந்தத்தானே எல்லாவற்றிற்கும் பற்றுக் கோடாதற் றன்மை.

---

திரவிய நிரூபணம் முடிந்தது.

## குண நிருபணம்.



குணமாவது திரவியம், கருமம் என்னும் இரண்டற்கும் வேருய்ச் சத்தை யாகிய சாதி யுடையது. சாமானிய விசேட முதலியவற்றின்கண் அதிவியாத்தி நீக்குதற் பொருட்டுத் திரவியம் கருமம் என்னும் இரண்டற்கும் பொதுவாய் என்ருெழியாது சத்தை யாகிய சாதியுடையது என்றும், திரவிய கருமங்களின் அதிவியாத்தி நீக்குதற் பொருட்டுச் சத்தா சாதியுடையதென்ருெழியாது திரவியகருமங்கள் இரண்டற்கும் வேருய் என்றும், கூறப்பட்டது. இவ்விலக்கணம் கௌரவமாய் முடிதலாற் குணத்தன்மையாகிய சாதியுடையதெனினுமாம்.

அது உருவம், இரதம், கந்தம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, குருத்துவம், திரவத்துவம், சிநேகம், சம்ஸ்காரம், தர்மம், அதர்மம், சத்தம் என விருபத்து

நான்கு வகைத்து. ஈண்டு உருவத் தன்மை முதலாயின அனைத்துஞ் சாதியே.

## குணவிருத்திப் பிரக்கிரியை.

அவற்றுள், உருவம் நேத்திரமாத்திரத்தாற் கிரகிக்கப்படும் குணம். அது பிருதிவி, அப்பு, தேயுக்களின் இருப்பது. அதுவும் வெண்மை, கருமை, பொன்மை, செம்மை, சித்திர முதலிய வேறுபாட்டான் எழுவகைத்து. இவ்வெழு வகையும் பிருதிவிக்கண் இருப்பன. அபாசுவர சுக்கிலரூபம் சலத்தின்கண் இருப்பது. பாசுவர சுக்கில ரூபம் தேயுவின்கண் இருப்பது.

இரதம் நாவினாற் கிரகிக்கப்படுங் குணம். அது பிருதிவி, சலத்தின்கண் இருப்பது. அதுவும் மதுரம், இலவணம், கடு, திக்தம், ஆமிலம், கஷாயம் என்னும் வேறுபாட்டான் அறுவகைத்து. பிருதிவிக்கண் அறுவகை யிரதமும் இருப்பன. சலத்தின்கண் மதுரவிரதம் ஒன்றே யுளது.

கந்தம் நாசியாற் கிரகிக்கப்படும் குணம்.

அது நறு நாற்றம் தீ நாற்றம் என விருவகைத்து. அது பிருதிவிக்கண் மாத்திரம் இருப்பது. பனிநீர் முதலிய நீரின்கண்ணும், சோலை முதலியவற்றின்கண் படிந்து செல்லும் வாயுவின்கண்ணும் கந்தமுண்மையான் பிருதிவிக்கண்மாத்திரம் இருப்பது என்றல் பொருந்தாதெனின் ;—அற்றன்று, ஆண்டும் பிருதிவி சம்பந்தம் உண்மையான் என்க.

பரிசம் துவக்கிந்திரியத்தான் மாத்திரங் கிரகிக்கப்படுங் குணம். அது பிருதிவி, அப்பு, தேயு, வாயுக்களின் இருப்பது. அது சீதம், உட்டணம், அநுட்டண சீதம் என்னும் பேதத்தான் மூவகைத்து. அநுட்டண சீதஸ்பரிசம் பிருதிவி வாயுக்களின் இருப்பது. சீதஸ்பரிசம் சலத்தின்கண் இருப்பது. உட்டணஸ்பரிசம் தேயுவின்கண் இருப்பது.

சங்கியை ஒருமை முதலிய விவகாரத்திற்குக் காரணம் எனவும், பரிமாணம் மான விவகாரத்திற்கு அசாதாரண காரணம் எனவும், வேற்றுமை வேறு என்னும் விவகாரத்திற்கு

அசாதாரண காரணம் எனவும், சையோகம் கூடியது என்னும் விவகாரத்திற்குக் காரணம் எனவும், விபாகம் சையோகத்தை நாசம்பண்ணுங் குணம் எனவும் உணர்க. இச்சங்கியை, பரிமாணம், வேற்றுமை சையோகம், விபாகம் என்னும் ஐந்து குணங்களும் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களினும்இருப்பன.

முன்னென்னும் விவகாரத்திற்கு அசாதாரணகாரணம் பரத்துவம் எனவும், பின்னென்னும் விவகாரத்திற்கு அசாதாரண காரணம் அபரத்துவம் எனவும் உணர்க. இப்பரத்துவ அபரத்துவங்கள் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, மனங்களின் இருப்பன.

புத்தி சர்வ விவகாரத்திற் கேதுவாகிய ஞானம் எனவும், சுகம் எல்லோர்க்கும் அநுகூலமாக உணரப்படுவது எனவும், துக்கம் எல்லோர்க்கும் பிரதிகூலமாக உணரப்படுவது எனவும், இச்சை காமம் எனவும், துவேஷம் வெகுளி எனவும், முயற்சி கிருதி எனவும், பாவனை அநுபவத்தின் காரியமாய் நினைவிற்குக்

காரணமாயது எனவும், தர்மம் வேத விகித கர்மம் எனவும், அதர்மம் வேத நிஷித்த கர்மம் எனவும், உணர்க. இப்புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, பாவனை, தன்மம், அதன்மம் என்னும் ஒன்பதும் ஆன்மாவின்கண் மாத்திரம் இருப்பன.

குருத்துவம் ஆதியிற் பதனத்திற்கு அசமவாயிகாரணம். அது பிருதிவி சலங்களின்கண் இருப்பது.

திரவத்துவம் ஆதியில் ஒழுகுவதற்கு அசமவாயிகாரணம். அது பிருதிவி, அப்பு, தேயுக்களின் இருப்பது. அதுவும் நைமித்திகத் திரவத்துவம் சாம்சித்திகத் திரவத்துவம் என விருவகைத்து. அவற்றுள் நைமித்திகத் திரவத்துவம் பிருதிவி தேயுக்களின்கண் இருப்பது சாம்சித்திகத் திரவத்துவம் சலத்தின்கண் மாத்திரம் இருப்பது.

சிநேகம் சூர்ண முதலியவற்றைத் திரட்டுதற்குக் காரணமாகிய குணம். அது சல மாத்திரத்தின்கண் இருப்பது.

சம்ஸ்காரம் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆன்மா மனங்களின்கண் இருப்பது. அதுவும் வேகம், பாவனை, திதித்தாபகம் என மூவகைத்து. அவற்றுள் வேகம் பிருதிவி முதலிய நான்கினும் மனத்தினும் இருப்பது. பாவனை ஆன்மாவின்கண் மாத்திரம் இருப்பது. திதித்தாபகம் கடமுதலிய பிருதிவிக்கண் இருப்பது.

சத்தம் சுரோத்திரேந்திரியத்தாற் கிரகிக்கப்படும் குணம். அது ஒலி வடிவும் எழுத்து வடிவுமென விருவகைத்து. அதுவும் ஆகாச மாத்திரத்தின்கண் இருப்பது. ஒலிவடிவு பேரிகை மிருதங்க முதலியவற்றிற் றோற்றுவது. எழுத்து வடிவு திராவிடம் சம்ஸ்கிருதம் முதலிய பாடை வடிவாய் உள்ளது.

## மூர்த்தகுணம்.

உருவம், இரதம், கந்தம், பரிசம், பரத்துவம், அபரத்துவம், திரவத்துவம், குருத்துவம், சிநேகம், வேகம் என்பன மூர்த்த குணங்கள்.

## அமூர்த்தகுணம்.

தர்மம், அதர்மம், பாவனை, சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி என்பன அமூர்த்தகுணங்கள்.

## மூர்த்தாமூர்த்தகுணம்.

சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம் என்பன மூர்த்தா மூர்த்த குணங்கள்.

## அநேகாசிரிதகுணம்.

சம்யோகம், விபாகம், இருமை முதலிய சங்கை, துவிபிரதத்துவம் என்பன அநேக திரவியங்களின் இருப்பன.

## ஈரிந்திரியக்கிராகியகுணம்.

சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம் என்பன வீரிந்திரியக்கிராகிய குணங்கள்.

## பகிரிந்திரியக்கிராகியகுணம்.

உருவம், இரதம், கந்தம், பரிசம், சத்தம் என்பன புறவிந்திரியத்தாற் கிரகிக்கப்படுங் குணங்கள்.

## அதீந்திரியகுணம்.

குருத்துவம், தர்மம், அதர்மம், பாவனே, நிலைபெறுத்துகை என்னும் இவைகளும், பரமாணு துவியணுகங்களின் உள்ள குணங்களும், அதீந்திரியங்களின் உள்ள சாமானிய குணங்களும், திரிசரேணுவினது உருவத்தை யொழித்தொழிந்த குணங்களும் அதீந்திரியங்கள்.

## விசேடகுணம்.

திரவியத்தைப் பகுக்கும் உபாதி யிரண்டின் ஒரு அதிகரணத்தின்கண் இராத சாதியுடைமை விசேடகுணத் தன்மை. உருவம், இரதம், கந்தம், பரிசம், சிநேகம், சாம்சித்திகத் திரவத்துவம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, தர்மம், அதர்மம், பாவனே யென்பன விசேட குணங்கள்.

இதற்குச்செய்யுள்.

உருவஞ்சாஞ்சித்திகத்திரவத்தொடு
மருவுகந்தமிரதம்பரிசமன்
னருகுநேசமொலிபுத்தியாதியா
வருநற்பாவனேவாய்த்தவிசேடமே.

## சாமானியகுணம்.

சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம், நைமித்திகத் திரவத்துவம், திதித்தாபகம் என்பன சாமானிய குணங்கள்.

### இதற்குச்செய்யுள்.

சங்கைபரிமாணம்வேற்றுமைசையோகம்விபா
கந்தயங்கு
துங்கமுளபரத்துவநல்லபரத்வங்குருத்துவமே
சொன்னிமித்தத்
தங்குறுதிரவத்துவந்திதித்தாபகமெனவே
யறையும்பண்பை
மங்கலிலாக்குணங்களுட்சாமானியமாங்குணமெ
னவே வகுப்பரன்றே.

## நித்தியகுணம்.

அப்பு, தேயு, வாயு, பரமாணுக்களின் கண் உள்ள விசேடகுணங்களும், பரமாணுக்களின் கண் உள்ள குருத்துவமும், திதித்தாபகமும், விபுக்களினும் பரமாணுக்களினுமுள்ள ஏகத்துவம், பரிமாணம், வேற்றுமைகளும், ஈசுரன் மாட்டுள்ள இச்சை, ஞானம், முயற்சிகளும் நித்திய குணங்கள்.

## பிரத்தியக்கப்பிரயோசகம்.

உருவம், இரதம், கந்தம், பரிசம், சிநேகம் என்னும் இவற்றின் பிரத்தியக்கத்தில் மகத்துவத்தோடு கூடிய உற்பூதத்தன்மையும், சாமானிய குணப் பிரத்தியக்கத்தில் ஆசிரயப் பிரத்தியக்கமும், புத்திப் பிரத்தியக்கத்தில் தன்னிடத்தி லிருக்கும் விசிட்ட ஞானத் தன்மையும், சுகாதிப் பிரத்தியக்கத்திற் றன்மாட் டிருக்கும் சுகத்தன்மை முதலியனவும் பிரயோசகமாம். முதலும் ஈறுமாகிய சத்தங்களை யொழித்தொழிந்த சத்தங்கள் பிரத்தியக்கங்கள்.

## குணோற்பத்திப் பிரக்கிரியை.

அவயவத்தின்கண் இருக்கும் விசேட குணங்கள் அவயவிகளில் தமது சமானசாதி விசிட்டமான குணங்களைத் தோற்றுவிக்கின்றன. பிருதிவிக்கண் இருக்கும் விசேட குணங்கள் பாகசங்கள். அவை பாகப்பிரயோச்சியம், பாகசன்னியமென விருவகைப்படும். காரணகுணத்தின் பரம்பரையினாற் றோற்றுவன பாகப்பிரயோச்சியம். வன்னியினது சையோகத்

தாற் றோற்றுவன பாகசன்னியம். "கருங்கடத்தின்கண் வன்னி சையோகத்தாற் கருவுருவம் அழிந்த வழிக் கடத்தின்கட் செவ்வுருவம் தோன்றுகின்றது." என்பது பிடரபாகவாதிகளாகிய நையாயிக மத சித்தாந்தம். "வன்னியின் சையோகத்தாற் பரமாணுக்களிற் பாக முண்டாயவழிப் பரமாணுக்களிற் செவ்வுருவந்தோன்றிய பின்னர்க் கடத்தின துற்பத்தி யுள்வழிக் காரணகுணக்கிரமத்தானே கடத்தின்கட் செவ்வுருவந் தோன்றுகின்றது." என்பது பீலுபாக வாதிகளாகிய வைசேடிக மதசித்தாந்தம். ஓர் கபாலம் நீலமும் ஓர்கபாலம் பீதமுமாயவழிக் கடத்தின்கட் சித்திரவுருவந்தோன்றுகின்றது. இரதங் கந்த முதலியவற்றின்கண் இவ்வாறுய வழி யவயவியின்கண் இரதங் கந்த முதலியன தோன்றலின்று, சித்திர விரதம் சித்திரகந்த முதலியவற்றை யங்கீகரியாமையான்.

இருமை முதலியன அபேட்சா புத்தியாற் றோற்றுவன.

பரிமாணம் காரணகுண பரம்பரையாற்

ரோற்றுவது ; அது நுண்மை, பெருமை, நெ டுமை, குறுமையென நான்கு வகைத்து. தன தவயவங்களினது வெகுத்துவம் மகத்துவத்தி னது உற்பத்திக்குக்காரணம். திரிசரேணுவின் மகத்துவம் போல அவயவங்களினது சிதில ரூபமாகிய பிரசயமும் அதனது உற்பத்திக்குக் காரணம் ; தூல பரிமாணம் போல.

வேற்றுமை காரண குணப் பிரக்கிரமத்தா ற் ரோற்றுவது. அற்றேல், ஆண்டுப் பிரமா ணமென்னை? "கடத்தினின்றும் படம் வேறு" என்னும் பிரத்தியக்கமே. அதற்கு அந்நி யோந்நியா பாவவிடயகத் தன்மை யெனின், அற்றன்று அந்நியோந்நியாபாவ ஞானத்திற் பிரதியோகி அநுயோகிகட்குச் சமானவேற் றுமைத்தன்மை நியம மாகலின், எங்ஙனம் :— "கடம்படமன்று" என்பது. அந்நியோந்நி யா பாவத்திற்குப் பிருதத்துவ ரூபம் ஒப்புக் கொள்ளின், "கடத்தினின்றும் படமில்லை" என்னும் பிரயோகமும் உண்டாகுக. "கடத் தினின்றும் அந்நியம் படம்." என்னும் வழி

அந்நியோந்நியாபாவ ஞானம் என்று கூறற்க; அந்நியத்தன்மைக்கும் வேற்றுமைத் தன்மையாகிய உருவமுண்மையின்.

சையோகம் அந்நியதர கர்மசம், உபயகர்மசம், சையோகசம் என மூவகைத்து. அந்நியதர கர்மசம் எங்ஙனம்:—மனத்தின் கர்மத்தானே யான்மாவிற்கும் மனத்திற்கும் உள்ள சையோகம். உபயகர்மசம் எங்ஙனம்:—அசங்களின் கர்மத்தானே யவற்றிற்கு உள்ள சையோகம். சையோகசம் எங்ஙனம்:—காரண அகாரணங்களின் சையோகத்தானே காரிய அகாரியங்கட்கு உள்ள சையோகம். கரத்திற்குந் தருவிற்கும் உள்ள சையோகத்தானே காயத்திற்குந் தருவிற்கும் உள்ள சையோகம்.

விபாகம் அந்நியதர கர்மசம், உபயகர்மசம், விபாகசம் என மூவகைத்து. அவற்றுள், அந்நியதரகர்மசம் எங்ஙனம்:—மனத்தின் கர்மத்தானே ஆன்மாவிற்கும் மனத்திற்கும் உள்ள விபாகம். உபயகர்மசம் எங்ஙனம்:—அசங்களின் கர்மத்தானே அவற்றிற்கு விபாகம். வி

பாகச விபாகமும் காரண மாத்திர விபாகசம் காரணஅகாரணவிபாகசம்எனவிருவகைத்து.

காரணமாத்திர விபாகசம் எங்ஙனம்:—கபாலத்தினது கர்மத்தானே கபாலத்துவயத்திற்கு விபாகம், அதன் பின்னர்க் கபாலத்துவய சையோக நாசம், அதன் பின்னர்க்கடநாசம், அதன் பின்னர்க்கபாலத்திற்கு ஆகாசாதி தேசத்திலிருந்து விபாகச விபாகந் தோன்றுகின்றது. விபாகமானது தனதுற்பத்தியின் பின்னரே விபாகச விபாகத்தைத் தோற்றுவிக்குக வெனின்;—அற்றன்று, திரவிய நாசத்தோடு கூடியவதற்கே அதைத் தோற்றுவிக்குந்தன்மையுண்மையான், திரவியத்திற்குப் பிரதிபந்தகத்தன்மை யுண்மையாற் றிரவியம் உள்வழி யதனது உற்பத்தியின்மையின். கன்மமே யொரே காலத்துக் கபாலத்துவய விபாகத்தையும் கபால ஆகாச தேச விபாகத்தையும் உண்டு பண்ணுக வெனின்;—அங்ஙனங் கூறற்க, திரவியத்தைத் தோற்றுவிக்குஞ் சையோகத்திற்கு விரோதியாகிய விபாகத்தைத் தோற்றுவிக்கும் கர்மம்

யாது அஃது திரவியத்தைத் தோற்றுவிக்காத சையோகத்திற்கு விரோதியாகிய விபாகத்தைத் தோற்றுவிக்காதாகலான். அங்ஙனமன்றாயின், மலர்ந்த தாமரையினது குட்மளதள கர்மத்தின்கண் அதிவியாத்தியாமென்க. சையோகத்தின்கண்ணும் இவ்வாறு கூறுகவெனின்;—ஆகாது, ஆண்டு அவிரோதமாகலின்.

இரண்டாவதோவெனின் காரண அகாரணங்களின் விபாகத்தானே காரிய அகாரியங்கட்கு விபாகம். கரத்திற்குந் தருவிற்குமுள்ள விபாகத்தானே காயத்திற்குந் தருவிற்கும் உள்ள விபாகம்.

பரத்துவ அபரத்துவங்களினது உற்பத்தி காலப் பிரகரணத்திற் கூறப் பட்டமையின் ஈண்டுக் கூறிற்றிலம்.

புத்தி ஞானம். அது நினைவும், அநுபவமும் என இருவகைத்து.

அவற்றுள், நினைவு யதார்த்தம், அயதார்த்தம் என விருவகைத்து. அவற்றுள், அதனையுடைய பொருளின்கண் அது பிரகாரமாக

நிகழுந்தன்மை யதார்த்தத்தன்மை. அஃதில் பொருளின்கண் அது பிரகாரமாக நிகழுந்தன்மை அயதார்த்தத்தன்மை. முன்னநுபவ மானது வாசனை வாயிலாக நினைவைத் தோற்று விக்கின்றது. ஆண்டு முன் னனுபவத்தினது யதார்த்தத் தன்மை அயதார்த்தத் தன்மைக ளானே நினைவும் இருவகைத்து.

அநுபவம் பிரமை அயதார்த்தமெனவிரு வகைத்து. ஆண்டுப் பிரமை நான்குவகைத்து. அது முற்கூறப்படும்.

அயதார்த்த ஞானம் சம்சயம், விபரியயம், சொப்பனம், அநத்தியவசாயம் என நால் வகைத்து.

சமான தர்மத்தையுடைய தர்மி ஞானத்தானும், விசேடதரிசனம் இன்மையானும், இரு தரும ஸ்மரணத்தானும், இஃது "தாணுவா புருடனோ?" என்கின்ற ஞானந் தோன்றுகின்றது; அதுவே சம்சயம்.

சமான தர்மத்தையுடைய தர்மி ஞானத்தானும், விசேடதரிசனம் இன்மையானும், ஒரு

தரும ஸ்மரணத்தானும், இப்பியின்கண் "இது இரசதம்" என்கின்ற ஞானந் தோன்றுகின்றது; அதுவே விபரியயம்.

ஆண்டுக் குருமதத்தின்கண் "இது" வென்பது அநுபவ சொரூபமான ஞானம். "இரசதம்" என்பது ஸ்மரணசொரூபமான ஞானம். அதனானே பிரத்தியக்கஸ்மரண சொரூபமான இருஞானம். இது இரசதத் தன்மையோடு கூடிய ஞானமன்று, அந்நியத்திற்கு வேறு விதமாகத் தோன்றுதற்குக் காரணமின்மையின். பிரவிருத்தியும் தானகத் தோன்றுகின்ற இட்டத்தினது பேதத்தைக்கிரகிக்காமையான், நையாயிக மதத்தின் விசிட்டஞானமே பிரவர்த்தகம். அதனாற் பிரமஞ் சித்தித்தது.

சொப்பனம் முன்னர் அநுபவித்த பதார்த்த ஸ்மரணத்தானும், அதிட்டத்தானும், தாது தோஷத்தானும் உண்டாகின்றது.

அநத்தியவசாயம் விசேடதரிசன மின்மையின் "இஃது ஒன்று" என்று தோன்றுகின்ற ஞானம்.

௩ண்டு "இஃது நீங்கியநெருப்பை யுடைத்தாய வழி நீங்கிய புகையையு முடைத்தாதல் வேண்டும்" என்னுந்தருக்கம் விபரியயத்தின் மத்தியிற் போதிக்கத்தக்கது. நையாயிகமதத்திற் சொப்பனம் அநத்தியவசாயம் என்னும் இரண்டும் விபரியயத்தின் மத்தியிற் போதிக்கப்பட்டன. ஆகலின்அம்மதத்தின்அயதார்த்த ஞானம்சம்சயம்விபரியயமென விருவகைத்து.

சுகம் தன்மத்தாற் றோற்றுவது. துக்கம் அதன்மத்தாற் றோற்றுவது. இச்சை இட்ட சாதன ஞானத்தாற் றோற்றுவது. துவேஷம் அநிட்டசாதன ஞானத்தாற் றோற்றுவது.

கிருதி சீவன யோனி யத்தநம், பிரவிருத்தி, நிவிர்த்தி யென மூவகைத்து. அவற்றுட் சீவன யோனி யத்தநம் என்பது சீவனது அதிட்டத்தாற் றோற்றுவது. பிரவிருத்தி என்பது இச்சையாற் றோற்றுவது. நிவிர்த்தி என்பது அநிச்சையாற் றோற்றுவது.

குருத்துவமும் சிநேகமும் காரணகுணப் பிரக்கிரமத்தாற் றோற்றுவன. நைமித்திகத்

திரவத்துவம் அரக்கு, கிருதம், ஓடவைத்த தமனிய முதலியவற்றின் வன்னி சையோகத் தாற் றோற்றுவது.

வேகம் எனப் பெயரிய சம்ஸ்காரம் முதற்கி ரியையினாற் றோற்றுவிக்கப்பட்டு, இரண்டா வது முதலிய கிரியைகளைத் தோற்றுவிப்பது. எங்ஙனம்:—"வேகத்தானே பாணம் ஓடுகி ன்றது" என்பது.

பாவனை எனப் பெயரிய சம்ஸ்காரம் விசிட் ட ஞானத்தாற் றோற்றுவது.

திதித்தாபகம் எனப் பெயரிய சம்ஸ்காரம் காரண குணத்தின் பிரக்கிரமத்தாற் றோற்று வது.

சத்தம் சையோகசம், விபாகசம், சத்தசம் என மூவகைத்து. அவற்றுட் சையோகசம் பேரிதண்டங்களின் சையோகத்தாற் றோற்று வது. விபாகசம் மூங்கில் முதலிய வற்றின் இரண்டு தளங்களினது விபாகத்தாற் றோற்று வது. சத்தசம் நிமித்த பவனத்தோடு கூடிய சையோகத்தாற்றான் விபாகத்தாற்றான் உண்

டாய முதற் சத்தத்தான் வீசிதரங்க நியாயத் தாற்ருன் கதம்ப கோரக நியாயத்தாற்ருன் உண்டாவது.

குண நிருபணம் முடிந்தது.

## கரும நிரூபணம்.

கரும மாவது சையோகத்திற்கு வேருய்ச் சையோகத்திற்கு அசமவாயி காரண மாயது. சையோகத்தின் கண் அதிவியாத்தி நீக்கற் பொருட்டுச் "சையோகத்திற்கு அசமவாயி காரண மாயது" என்ருெழியாது "சையோ த்திற்கு வேருய்" என்றும், திரவிய முதலிய வற்றின்கண் அதிவியாத்தி நீக்கற்பொருட்டுச் "சையோகத்திற்கு வேருய்" என்ருெழியா து, "சையோகத்திற்கு அசமவாயி காரண மாயது" என்றும் உரைக்கப்பட்டது.

அது எழுதல், விழுதல், வளைதல், நிமிர் தல், நடத்தல் என வைவகைத்து. இவற்றை வடநூலார் உட்சேபணம், அவக்ஷேபணம், ஆகுஞ்சனம், பிரசாரணம், கமனம் எனக் கூ

றுப. எழுதற்றன்மை முதலியன சாதி. எழு தல் மேலிடத்துக் கூடுதற் கேது. விழுதல் கீழிடத்திற் கூடுதற் கேது. வளைதல் உடல் வளைந்து கூடுதற் கேது. ஏனை அனைத்தும் நடத்தல் எனப்படும்.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, மனங்களின் கண் இருப்பனவாகிய சர்வ கருமங்களும் அநித்தியம் எனவும், அதீந்திரியங்களின் கண் இருப்பனவாகிய கருமங்கள் அதீந்திரியங்கள் எனவும், பிரத்தியக்கங்களின்கண் இருப்பனவாகிய கருமங்கள் பிரத்தியக்கங்கள் எனவும் உணர்க.

நோதனம் எனப் பெயரிய சையோகத்தானே முதற் கிரியையும், வேகத்தானே இரண்டாவது முதலிய கிரியைகளும், கிரியையானே விபாகமும், விபாகத்தானே பூர்வ தேச சையோக நாசமும், அதன் பின்னர் உத்தர தேச சையோகமும், அதன் பின்னர்க் கருமத்திற்கும் விபாகத்திற்கும் நாசமுந் தோன்றுகின்றன.

கருமநிருபணம் முடிந்தது.

## சாமானிய நிரூபணம்.



சாமாநியமாவது நித்தியமாய் அநேகத்திற் சமவேத மாயது. சையோக முதலியனவும் அநேகத்திற் சமவாய சம்பந்தத்தானே விருத்தியாத லுண்மையின் ஆண்டு அதிவியாத்தி நீக்குதற் பொருட்டு "நித்தியமாய்" எனவும், ககன பரிமாண முதலியனவும், நித்தியமாய் சமவாய சம்பந்தத்தானே ககன முதலியவற்றின்கண் விருத்தியாத லுண்மையின் ஆண்டு அதிவியாத்தி நீக்குதற் பொருட்டு "அநேகத்திற் சமவேத மாயது" எனவும், அத்தியந்தாபாவமும் நித்தியமாய் அநேகத்தில் விருத்தியாத லுண்மையின் ஆண்டு அதிவியாத்தி நீக்குதற் பொருட்டுச் "சமவேதமாயது" எனவுங் கூறப்பட்டது.

சாமானியம் வியாபகம், வியாப்பியம், வியாப்பிய வியாபக மென மூவகைத்து. அவற்றுட் கடத் தன்மை படத் தன்மை முதலாயினவற்றை நோக்க அதிகதேச விருத்தியாதலாற் சத்

தை வியாபக சாமானிய மெனவும், சத்தையை நோக்க அற்ப தேச விருத்தியாதலாற் கடத் தன்மை படத் தன்மை முதலாயின வியாப்பிய சாமானிய மெனவும், அதிக தேச விருத்தியா கிய சத்தையை நோக்க வியாப்பிய மாயும் அற்ப தேச விருத்தியாகிய கடத் தன்மை பட த் தன்மை முதலாயினவற்றை நோக்க வியா பகமாயும் இருத்தலாற் றிரவியத் தன்மை கு ணத் தன்மை முதலாயின வியாப்பிய வியாபக மெனவும் படும்.

ஏக வியத்தி விருத்தித்துவம், சாங்கரியம், துல்லிய வியத்திவிருத்தித்துவம், அநவத்தை, இலக்கண பங்கம், சம்பந்தா பாவம் என்பன சாதி பாதகங்கள்.

இதற்குச்செய்யுள்.

ஒருவியத்தியுடைமையோர்சாங்கரம்
பெருகுதுல்லியம்பேணுமநவத்தை
சொரூபகானியுந்தோன்றுமசம்பந்தம்
மருவுகின்றிலசாதியின்வாய்க்கவே.

சாமானியங்கள் அனைத்தும் நித்தியங்கள் எனவும், அதீந்திரியங்களின் கண் இருப்பன

அதீந்திரியங்கள் எனவும், பிரத்தியக்கங்களின் கண் இருப்பன பிரத்தியக்கங்களெனவும் உணர்க. சாமானியம் திரவியம், குணம், கருமம் என்னும் மூன்று பதார்த்தத்தின் கண்ணும் உளது.

உபாதி அகண்டோபாதி, சகண்டோபாதியென விருவகைத்து.

சாமானிய நிரூபணம் முடிந்தது.

## விசேட நிரூபணம்.

நித்தியத் திரவியங்களின் இருப்பனவாய் அந்தியங்களாய் உள்ளன விசேடங்கள். அவை அநேகமாய், நித்தியமாய், அதீந்திரியங்களாய் உள்ளன. பிரளய காலத்திற் பரமாணுக்களினது பேதத்தை உணர்தற் பொருட்டு அவை அவற்றின்கண் உள்ளனவென அங்கீகரிக்கப்பட்டன, அவற்றிற்கு வெதிரேகவியாத்தி விசிட்டத்தன்மையான்.

விசேட நிரூபணம் முடிந்தது.

# சமவாய நிரூபணம்.



சமவாயமாவது சம்பந்திகட்கு வேறாய் நித்திய சம்பந்தமாயுள்ளது. இங்ஙனம் கூறப்பட்டதனாற் சையோக சம்பந்தத்தின் கண்ணுஞ் சொரூப சம்பந்தத்தின் கண்ணும் அதிவியாத்தி இன்றென்க. ஆண்டு இக்கடத்திற் கடத்தன்மை யென்னும் ஞானமே பிரமாணம். நையாயிக மதத்தின்கட் சமவாயம் பிரத்தியக்கம். அச்சமவாயமும் ஒன்றாய் நித்தியமாய் உளது.

அற்றேல், அந்நியமாகிய அந்தகாரம் சுவர்ணமுதலிய திரவியங்களும், சோம்பன் முதலிய குணங்களும், சுழற்சி முதலிய கருமங்களும் உண்மையிற் றிரவியம் ஒன்பதென்றும், குணம் இருபத்துநான்கென்றும், கருமம் ஐந்தென்றும் கூறுதல் பொருந்தா தெனின்:—அற்றன்று, அந்தகாரம் தேயுவின் அபாவமாகலானும், சுவர்ணம் தேயுவே யாகலானும், சோம்பல் முயற்சியின் அபாவமே யாகலானும், சுழற்சி நடத்தற்கண் அடங்குதலானும்

என்க. இவ்வாறே ஏனையவற்றையும் ஊகித்துணர்ந்துகொள்க.

சமவாய நிரூபணம் முடிந்தது.

## அபாவ நிரூபணம்.

பாவ பின்னத் தன்மை அபாவத் தன்மை. அவ் வபாவம் சம்சர்க்காபாவம், அந்நியோந்நியாபாவ மென இருவகைத்து. சம்சர்க்கா பாவம் பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், அத்தியந்தாபாவமென மூவகைத்து.

இதற்குச்செய்யுள்.

அந்நியோந்நியஞ்சஞ்சர்க்கமாமெனப்
பன்னபாவப்பகுப்பிரண்டாமது
மன்னுமூவகைத் தாமத்தியந்தமன்
முன்னபாவமுடிவினபாவமே.

### பிராகபாவம்.

அவற்றுட், பிராகபாவமாது உற்பத்தியின்றி நாசமுடையது. அது காரியத்தினது உற்பத்திக்கு முன்னருள்ளது. எங்ஙனம் :—தந்துக்களிற் படம் இல்லை.

ஆகாச முதலியவற்றிற்கும் உற்பத்தி யின்மை உண்மையின் ஆண்டு அதிவியாத்தி நீக்குதற்பொருட்டு "நாசமுடையது" என்றும், கட முதலியவற்றிற்கும் நாச முண்மையின் ஆண்டு அதிவியாத்தி நீக்குதற் பொருட்டு "உற்பத்தி யின்றி" என்றுங் கூறப்பட்டது.

பிராகபாவமாவது தனது பிரதியோகியின் சமவாயி காரணத்தின்கண் இருந்து பிரதியோகியைத் தோற்றுவிப்பதாய்த் "தோன்றும்" என்னும் விவகாரத்திற்கு நிமித்தமாயது.

## பிரத்துவம்சா பாவம்.

துவம்சாபாவமாவது உற்பத்தியுடைத்தாய் நாச மின்றி யிருப்பது. அது காரியத்தினது உற்பத்திக்குப்பின்ன ருள்ளது. எங்ஙனம்:— கடம் நசித்த வழிக் கபாலத்திற் கட மில்லை.

கட முதலியவற்றின்கண் அதிவியாத்தி நீக்குதற்பொருட்டு "நாச மின்றி யிருப்பது" என்றும், ஆகாச முதலிய வற்றின்கண் அதிவியாத்தி நீக்குதற் பொருட்டு "உற்பத்தி யுடைத்தாய்" என்றும் கூறப்பட்டது.

பிரத்துவம்சாபாவமாவது தனது பிரதியோகியாற் றோற்றிப் பிரதியோகியின் சமவாயி காரணத்தின்கண் இருப்பதாய் "நசித்தது" என்னும் விவகாரத்திற்கு நிமித்தமாயது.

## அத்தியந்தா பாவம்.

அத்தியந்தா பாவமாவது திரிகாலத்தினும் உளதாய சம்சர்க்கத்தான் வரைந்துகொள்ளப் படும் எதிர்மறைத் தன்மையை யுடையது. எங்ஙனம்:—வாயுவின்கண் உருவம் இல்லை. அந்நியோந்நியா பாவத்தின்கண் அதிவியாத்தி நீக்குதற்பொருட்டுச் "சம்சர்க்கத்தான் வரைந்துகொள்ளப்படும்" என்றும், பிராகபாவம் பிரத்துவம்சா பாவங்களின்கண் அதிவியாத்தி நீக்குதற்பொருட்டுத் "திரிகாலத்தும் உளதாய" என்றும் கூறப்பட்டது.

அத்தியந்தாபாவம் நித்தியமென்றல் கூடாது, கடாபாவத்தையுடைய பூதலத்தின்கட் கடங் கொணர்ந்துழி அபாவ ஞானம் நிகழ்தல் இன்மையான் எனின்;—அற்றன்று, கடத்தைக்கொண்டு சென்றதன் பின்னர் அவ்வபாவப்

பிரதீதி நிகழ்தலாற் றலத்திற்கும் கடத்திற்கு முள்ள சையோகத்தினது பிராகபாவமுந் துவம்சாபாவமும் அவ் வத்தியந்தாபாவப் பிரதீதியை நிகழ்த்துவன வாகலான் என்க. ஒரு சாரார் உற்பாத விநாச சாலியாகிய சாமயிகாபாவம் அதிரித்தமாகிய வோர் அபாவமென அங்கீகரிப்ப.

ஈண்டுப் பிராசீனர், "துவம்சப் பிராகபாவங்களினது அதிகரணத்தின்கண் அத்தியந்தாபாவம் இன்று" என்றும், "கருங் கடத்தின்கட் செம்மை இன்று, செங் கடத்தின்கட் கருமை இன்று." என்னும் பிரதீதிகள் பிராக பாவத்தையும், துவம்சத்தையும் விடயீகரிக்கின்றனவே யன்றி அத்தியந்தாபாவத்தை விடயீகரிப்பன வல்ல" என்றும், நவீனர் "துவம்சப் பிராகபாவ வதிகரணத்தின்கண் அத்தியந்தாபாவம் இன்று" என்பதிற் பிரமாணம் இன்மையாற் றுவம்சப் பிராகபாவ வதிகரணத்தின்கண் அத்தியந்தா பாவம் உண்டு" என்றுங், கூறுப.

## அந்நியோந்நியா பாவம்.

அந்நியோந்நியாபாவமாவது தாதான்மியத் தான் வரைந்த பொருளைப் பிரதியோகியாக வுடைய வின்மை. எங்ஙனம்:—கடம் படம் அன்று.

யோக்கியமாகிய அநுபலத்தியினுல் அபாவம் பிரத்தியக்கம்; ஏனையிடத்தோவெனின் அதீந்திரியம்.

இனிக் குருமதத்தினர், "கடாபாவ படாபாவமுதலிய வபாவங்களனைத்தும் அவ்வவ் வபாவங்களது அதிகரண சொரூபமே யன்றி வேறு பதார்த்த மன்று, இலாகவத்தான்." என்று கூறுப; அது பொருந்தாது, அநந்த வதிகரண சொரூபங் கற்பித்தலை நோக்க அதிரித்தமாகிய வோர் அபாவங் கற்பித்தல் அத்தியந்தம் இலகுவாகலான், என்க. இதனுலன்றே "பூதலங் கடாபாவத்தை உடைத்து" என்புழி ஆதார ஆதேயத்துவம் பெறப்படுவதூஉம், அவ்வச் சத்த கந்த விரத முதலிய வற்றின் அபாவம் பிரத்தியக்க மாவதூஉமென்க.

அங்ஙன மன்றாயின், அவ்வவ் வதிகரணங்களை இந்திரியங்கள் கிரகிக்காமையான், அவ்வபாவங்கள் பிரத்தியக்க மாகாவென்க. இதனானே "ஞான விசேடங் கால விசேடமே அத்தியந்தா பாவம்" என்பார் மதமும் மறுக்கப்பட்டவாறுணர்க, அபாவம் அப்பிரத்தியக்கமாய்ப் போதலான்.

இனிக் கௌதமர் நியாய சூத்திரத்திற் கூறிய பிரமாணம், பிரமேயம், சம்சயம், பிரயோசனம், திருட்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தர்க்கம், நிர்ண்ணயம், வாதம், செற்பம், விதண்டை, ஏத்துவாபாசம், சலம், சாதி, நிக்கிரகஸ்தானம் எனப்படும் பதினாறு பதார்த்தங்களும் ஈண்டுக் கூறிய ஏழு பதார்த்தத்தின் கண்ணும் அடங்குதலான் விரோத மின்மை தெளிக.

அற்றேல், பதார்த்தம் ஏழென்றல் பொருந்தாது, கரதலத்தின்கண் அநல சம்யோக முள்வழியும் பிரதிபந்தகம் உண்டாயிற் றாகம் உண்டாகாமை காண்டலின் சத்தி வேறு பதார்த்

தம் ஆகலின் எனின்;—அற்றன்று, பிரதிபந்தகத்தினது அபாவம் காரிய மனைத்திற்குங் காரணமாகலான் சத்தி அங்கீகரியாமையின், காரணமாதற் றன்மையே சத்தி யென்னும் பதார்த்த மாகலான் என்க.

அபாவ நிரூபணம் முடிந்தது.

## பிரத்தியக்க நிரூபணம்.

பிரமை பிரத்தியக்கம், அநுமிதி, உபமிதி, சாத்தம் என நால்வகைத்து. அவற்றின் கரணமாகிய பிரமாணமும் பிரத்தியக்கம், அநுமானம், உபமானம், சத்த மென்னும் வேறுபாட்டான் நால் வகைத்து.

அக்கரணம் நான்கனுட் பிரத்தியக்கமாவது பிரத்தியக்க ஞானத்திற்குக் கரணம். பிரத்தியக்கமாவது இந்திரிய விடய சம்பந்தத்தானே தோன்றும் ஞானம். இதுவே பலமெனப் படும். பாகியப் பிரத்தியக்கத்தில் இந்திரிய மன

சையோகமும், ஆந்தரப் பிரத்தியக்கத்தில் ஆன்ம மன சையோகமும் வியாபாரமா மென்க.

பிரத்தியக்க கரணங்கள் கிராணம், இரசனம், சக்ஷுசு, சுரோத்திரம், துவக்கு, மனம் என்னும் அறு வகை இந்திரியங்களே.

அற்றேல், "இந்திரிய விடய சம்பந்தத்தானே தோன்றும் ஞானம் பிரத்தியக்கம்" எனின், ஈசுரனது பிரத்தியக்க ஞானம் நித்தியமேயாகலானும், அவற்கு இந்திரியங்கள் இன்மையின் அவற்றாற் றோன்றல் இன்மையானும், ஆண்டு அவ்வியாத்தி வருங்கொல்லோ வெனின்;—அற்றன்று, ஈண்டுச் சீவப் பிரத்தியக்கமே இலக்கிய மாகலானும் ஆண்டை ஈசுரப் பிரத்தியக்கம் அலக்கியமாகலானும் என்க.

சீவப் பிரத்தியக்கம் ஈசுரப் பிரத்தியக்கம் எனப்படும் இரண்டற்குஞ் சாதாரணமாக இலக்கணம் உரைக்க வேண்டின், "ஞானத்தை அகரணமாக வுடைய ஞானம்" என்று கூறுக. ஈண்டு "ஞானம்" என்றது வியாத்திஞானம், சாதிருசிய ஞானம், பத ஞானங்க ளாகலான்,

அவற்றைக் கரண மாக வுடைய அநுமிதி, உபமிதி, சாத்தங்களின்கண் அதிவியாத்தி யின்மையும், சீவப் பிரத்தியக்கத்தின்கண் இந்திரியங்கள் கரணமாவன வன்றி ஞானங்கரணமாகாமையான், ஆண்டு அவ்வியாத்தி யின்மையும் உணர்க.

சையோக முதலாகிய வறுவகைச் சந்நிகருடமும் வியாபாரமெனிற் படும் இழுக்கென்னை? அவை இந்திரியங்களாற் றோன்றி இந்திரியங்களாற் றோன்றுவனவாகிய "இது கடம். இது படம்." என்பது முதலிய பிரத்தியக்கத்தைத் தோற்றுவிப்பன வாகலான் எனின் ;— அற்றன்று, முதற் சந்நிகருடமாகிய சையோகத்தை யொழித் தொழிந்த சையுத்த சமவாய முதலிய நான்கு சந்நிகருடமும் நித்தியமாகிய சமவாயமே யாகலான்.

சந்நிகருடம் இலௌகிக சந்நிகருடம், அலௌகிக சந்நிகருடம் என விரு வகைத்து. அவற்றுள், இலௌகிக சந்நிகருடம் சையோகம், சையுத்த சமவாயம், சையுத்த சமவேத

சமவாயம், சமவாயம், சமவேத சமவாயம், விசேடண விசேடிய மென வறு வகைத்து. அலௌகிக சந்நிகருடம் ஞான விலக்கணை, சாமானிய விலக்கணை, யோகச தர்ம மென மூவகைத்து.

## இலௌகிக சந்நிகருடப் பிரக்கிரியை.

சையோக சம்பந்தத்தாற் றிரவியத்திற்குப் பிரத்தியக்கம்.

சையுத்த சமவாய சம்பந்தத்தாற் றிரவிய விருத்தியாகிய சாதிகட்கும், சத்தத்தை யொழித் தொழிந்த குணங்கட்கும், கருமங்கட்கும் பிரத்தியக்கம், இந்திரிய சையுத்த மாகிய திரவியத்திற் சாதியும், சத்தத்தை யொழித் தொழிந்த குணமும், கருமமும் சமவாயமாகலான்.

சையுத்த சமவேத சமவாய சம்பந்தத்தாற் சத்த மாத்திர விருத்தியாகிய சாதியை யொழித் தொழிந்த குண கருமங்களின் கண் விருத்தியாகிய சாதிகட்குப் பிரத்தியக்கம், இந்திரிய சையுத்தமாகிய திரவியத்திற் சத்தத்தை யொழித் தொழிந்த குணங்களும் கருமங்க

ளும் சமவேதம், ஆண்டுக் குணத் தன்மை கருமத் தன்மைகள் சமவாய மாகலான்.

சமவாய சம்பந்தத்தாற் சத்தத்திற்குப் பிரத்தியக்கம், செவித் துளையின் உளதாகிய ஆகாயமே சோத்திரமாதலாற் சத்தும் ஆகாய குணமாகலிற் குண குணிகட்குச் சமவாயம் உண்மையான்.

சமவேத சமவாய சம்பந்தத்தாற் சத்த விருத்தியாகிய சாதிக்குப் பிரத்தியக்கம், சோத்திரத்திற் சமவேதமான சத்தத்திற் சத்தத் தன்மை சமவாயம் ஆகலான்.

விசேடணதா சம்பந்தத்தால் அபாவத்திற்கும் சமவாயத்திற்கும் பிரத்தியக்கம்.

கடப் பிரத்தியக்கத்திற் சக்ஷுஸ் சையோகமும், கட சம வேதமாகிய உருவப் பிரத்தியக்கத்திற் சக்ஷுஸ் சையுத்த சமவாயமும், கட சமவேத சமவேதமாகிய உருவத்துவப் பிரத்தியக்கத்திற் சக்ஷுஸ் சையுத்த சமவேத சமவாயமும், வாயுப் பிரத்தியக்கத்திற் றுவக் சையோகமும், வாயு சமவேதமாகிய அநுட்டிண சீதப் பரிசப்

பிரத்தியக்கத்திற் றுவக்சையுத்த சமவாயமும், வாயு சமவேத சமவேதமாகிய பரிசத்துவப் பிரத்தியக்கத்திற் றுவக் சையுத்த சமவேத சமவாயமும், ஆன்மப் பிரத்தியக்கத்தின் மன சையோகமும், ஆன்ம சம வேதமாகிய சுகப் பிரத்தி யக்கத்தில் மன சையுத்த சமவாயமும், ஆன்ம சமவேத சமவேத மாகிய சுகத்துவா திப் பிரத்தியக்கத்தில் மன சையுத்த சமவேத சமவாயமுங் காரணங்களாம்.

ஈண்டுச் சட்சு, துவக்கு, மனம் என்னும் மூன் றிந்திரியங்களுமே திரவியத்தைக் கிரகிப் பன வெனவும், ஏனைய கிராணம், இரசனம், சிரவணம் என்னும் மூன் றிந்திரியங்களும் குண முதலியவற்றைக் கிரகிப்பன வெனவும் உணர்க.

கிராணம், இரசனம் என்னும் இந்திரியங் கள் கந்தம், இரதம் என்னும் இவற்றையும், இவற்றை யடைந்த சாமானியத்தையுங் கிர கித்தற்கண் இரண்டாவது மூன்றாவது சந்நிக ருடங்களும், சிரவணேந்திரியம் சத்தத்தையும்

சத்தத்தையடைந்த சாமானியத்தையுங் கிரகித்தற்கண் சமவாயம், சமவேத சமவாயம் என்னும் நான்காவது ஐந்தாவது சந்நிகருடங்களும் காரணங்களாம்.

அபாவத்தலத்திற் பஞ்ச சந்நிகருடங்களிற் சையோகத் தானத்திற் சையுத்த பதத்தைச் சேர்த்துச், சமவாயத் தானத்திற் சமவேத பதத்தைச் சேர்த்துச், சையுத்த விசேடணதை, சையுத்த சமவேத விசேடணதை, சையுத்த சமவேத சமவேத விசேடணதை, சமவேத விசேடணதை, சமவேத சமவேத விசேடணதை எனக் கூறுக.

## அலௌகிகப் பிரத்தியக்கம்.

அலௌகிகம் எங்ஙனம்:—ஞான விலக்கணப் பிரத்தியா சத்தியாற் "சந்தனக் கட்டை வாசனை யுடைத்து" என்னுஞ் சாட்சுச ஞானம். சாமானிய விலக்கணப் பிரத்தியா சத்தியாற் கடத் தன்மையாகிய விசேடணத்தை யுடைய சர்வ கட ஞானம். யோகச தர்மத்தானே யுத்தன், யுஞ்சானன் என்னும் இருவகை

யோகிகட்கும் பிருதிவி பரமாணு முதலிய சர்வ ஞானம்.

இதற்குச் செய்யுள்.

நல்லஞானவிலக்கணை நாவலர்
சொல்லுசாமானியச்சுகலக்கணை
யல்லறீர்தருயோகசதர்மமா
வெல்லலெளகிகமூன்றென்பமேலையோர்.

## பிரத்தியக்க விபாகம்.

ஆண்டுப் பிரத்தியக்கம் நிருவிகற்பம் சவிகற்பமென விருவகைத்து.

நிருவிகற்பமாவது விசேடியத்தை விசேடணத்தை முதலிய வின்றி "இஃது ஏதோ வொன்று" என வத்துவின் சுவரூப மாத்திரத்திற் றோன்றும் ஞானம். நிருவிகற்பப் பிரத்தியக்கம் உண்டென்பதிற் பிரமாணம் என்னை எனின்;—"கோத் தன்மையாகிய விசேடணத்தை யுடைய கோவென்னும் விசேடிய ஞானம் விசேடண ஞானத்தாற் றோன்றற் பாலது, விசேடிய ஞான மாகலின், தண்டியென்னும் ஞானம் போலும்." என்னும் அநுமானமே பிரமாணமென்க. விசேடண ஞானமுஞ் சவிகற்பமெ

னின் அநவத்தைப் படுமாகலின் நிருவிகற்பம் உண்டென்பது பெறுதும்.

சவிகற்பமாவது நாமம் சாதி முதலாகிய பிரகாரத்தோடு சகிதமாகிய ஞானம். பிரகாரத்தன்மை யாவது ஞான விடயமாகிய வைசிட்டியத்திற்குப் பிரதியோகித் தன்மை. எங்ஙனம்:—"இது கடம்" என்னும் இடத்து "இது" வென்பது விசேடியம் எனவும், கடத் தன்மை பிரகாரம் எனவும், ஞான விடய மாகிய வைசிட்டியம் அவற்றின் சமவாயம் எனவும், அதனது பிரதியோகி கடத் தன்மை எனவும் உணர்க.

விசிட்டத்திற்கு வைசிட்டியத்தைக் கருதும் ஞானம் சவிகற்பமே. எங்ஙனம்:—"இவன் தண்டி" என்னு மிடத்துத் தண்டத் தன்மையோடு கூடிய தண்டத்திற்கு வைசிட்டியம் புருடன் மாட்டுத் தோன்றுகின்றது. முதற்கட் கடம் கடத்தன்மை என்னும் நிருவிகற்பமும், அதன் பின்னர் "இது கடம்" என்னும் விசிட்ட ஞானமுந் தோன்றுகின்றன.

## பிராமாணியப் பிரக்கிரியை.

ஞானக் கிராகக பின்னமாகிய அநுமானத் தானே பிராமாணியக் கிரகணம் என நையாயிகர் கூறுப. எங்ஙனம்:—முதற்கட் "கடம்" என்னும் வியவசாயமும், அதன் பின்னர்க் "கடத்தை யான் உணர்ந்தேன்." என்னும் அநுவியவசாயமும், அதன் பின்னர்ப் பிராமாணியம் அப்பிராமாணியம் என்னும் இருதரும் ஸ்மரணமும், அதன் பின்னர் "இஞ்ஞானம் பிரமையா அன்றா?" என்னும் பிராமாணிய சந்தேகமும் நிகழும். அதன் பின்னர் விசேட தரிசனானந்தரம், "இஞ்ஞானம் பிரமை, பிரயோசனத்தோடு கூடிய பிரவிருத்தியை உண்டாக்கலான்; யாது யதார்த்தாநுபவமன்று அது பிரயோசனத்தோடு கூடிய பிரவிருத்தியை உண்டாக்காது, அப்பிரமைபோலும்." என்னுங் கேவலவெதிரேகியநுமானத் தானே பிராமாணியம் நிச்சயிக்கப்படுமென்க. இனிப் பிரமைத் தன்மை, இரண்டாவது நிகழ்வது முதலிய ஞானங்களிற் பூர்வ ஞானங்

திருட்டாந்த மாதல் உண்மையின், அதன் சா
தியுடைமை யாகிய விலிங்கத்தானே அந்
வய வெதிரேகி யநுமானத்தானும், நிச்சயிக்
கப் படுமென வுணர்க.

குரு மதத்தினர் முராரி மிசிர மதத்தினர்
பாட்ட மதத்தினர் என்னும் மூவகையாகிய
மீமாஞ்சகரும் பிராமாணியம், அது அப்பிரா
மாணியத்தைக் கிரகிக்காது எல்லா ஞானங்க
ளையுங் கிரகிக்குஞ் சாமக்கிரியாற் கிரகிக்கற் பா
லது என்ப.

அநுமான முதலியவற்றாற் கிரகிக்கற் பால
தாகலாற் சித்த சாதன மென்னுந் தோடம்
வாராமல் நீக்கற் பொருட்டு "எல்லாம்" என்
றும், இஞ்ஞானம் பிரமை யன்று என்னும்
ஞானத்தாற் பிராமாணியங் கிரகிக்கப் படா
மையான் ஆண்டு மறுப்பு வாராமை நீக்கற்
பொருட்டு "அப்பிராமாணியத்தைக் கிரகிக்
காது" என்றும், இஞ்ஞானம் அப்பிரமை
என்னும் அநுவியவசாயத்தின்கட் பிராமாணி
யத்தைக் கவருங் கருவிக்குப் பிராமாணியத்

தைக் கிரகிக்குந் தன்மை யின்மையாற் றன்
னுலாதல் இன்றாய் முடியும், அதனை நீக்குத
ற்கு "அது" வென்றுங் கூறப்பட்டது.

குரு மதத்தின்கண் மிதி, மாதா, மேயம்
என்னும் மூன்றும் எல்லா ஞானத்தினுந்
தோன்றுகின்றன, "கடத்தை யான் உணர்ந்
தேன்." என்னும் ஆகாரமே அவர் மதத்தின்
கண் வியவசாயமாகலான். அவ்வியவசாயமா
னது சுவப் பிரகாசமாகலின் அதனை யடைந்த
பிராமாணியமும் அதனுனே கிரகிக்கப்படும்;
விசிட்ட ஞானத்தைக் குறித்து விசேடண ஞா
னத்திற்குக் காரணத்துவம் அம் மதத்தினர்
அங்கீகரியாமையான், உபஸ்தித மாகாத பிரா
மாணியத்திற்கும் பாஸம் சம்பவித்தல் கூடு
மாகலான்.

முராரி மிசிர மதத்தின்கண் "இது கடம்"
என்னும் ஞானம் உண்டாயதன் பின்னர்க்,
கடத்தன்மையானே "கடத்தை யான் உணர்
ந்தேன்" என்னும் அநு வியவசாயம் உண்டா
கின்றது; அதனுனே பிராமாணியக் கிரகணம்.

பாட்ட மதத்தின்கண் ஞானம் அதீந்திரிய
மாகலான் அது எங்ஙனம் அனுமிக்கத் தகுந்த
தோ அங்ஙனமே அஞ் ஞானத்தின் விருத்தி
யாகிய பிராமாணியமும் அநுமிக்கத் தகுந்
தது. அங்ஙன மன்றோ! "இது கடம்" என்
னும் ஞானத்தின் பின்னர்க் கடத்தின்கண் ஞா
ததை உதிக்கின்றது. அதன் பின்னர்க் "கடம்
என்னால் உணரப்பட்டது" என ஞாததைக்
குப் பிரத்தியக்கம். அதன் பின்னர் வியாப்பிய
முதலிய பிரத்தியக்கந் தோன்றியவழி ஞானத்
திற்கு அநுமிதி. எங்ஙனம் :— "யான் கடத்
தன்மையை விசேடணமாகவுடைய ஞானத்
தை யுடையேன், கடத் தன்மையை விசேட
ணமாகவுடைய ஞாததையை உடைமையின்."
ஈண்டு ஞாததையின் பிரத்தியக்கத்தானே
அந்த ஞானத்திற்கு விசேடண விசேடியதா
நிரூபகமா யிருத்தலாற் பிராமாணியத்திற்கு
அநுமிதி யென்க. ஞாததையாவது சவிஷய
மாயும் ஞானத்தான் உண்டாவதாயும் உள்ள
அதிரிக்த பதார்த்தம் என்பது அவர் மதம்.

பிரத்தியக்க நிரூபணம் முடிந்தது.

# அநுமான நிரூபணம்.



அநுமான மாவது அநுமிதிக்குக் கரணம். வியாபாரத்தை யுடைய காரணங் கரணம். வியா பாரமாவது அதனிற் றோன்றி யதனிற் றோன்றற் பால தொன்றனைத் தோற்று விப்பது. சக்கரப் பிரம மானது, தண்டத்தாற் றோன்றித் தண்டத்தாற் றோன்றற் பாலதாகிய கடத்தைத் தோற்று வித்தலான், வியா பார மாயவாறு போலப், பராமரிசமும், வியாத்தி ஞானத்தாற் றோன்றி வியாத்தி ஞானத்தாற் றோன்றற் பாலதாகிய அநுமிதியைத் தோற்று வித்தலான், வியாபார மாயிற் றென்றறிக.

அநுமிதித் தன்மை சாதி. அநுமிதியாவது பராமரிசத்தானே தோன்றும் ஞானம். இதுவே பலம். ஞான மாத்திரங் கூறிற் பிரத்தியக்கம் உபமிதி முதலியனவும் ஞான மாகலான் ஆண்டு அதிவியாத்தி நீக்குதற் பொருட்டுப் பரா மரிசத்தாற் றோன்றுவது என்றும், பராமரிசத்தாற் றோன்றுவது எனக் கூறின், துவ

ம்சத்தைக் குறித்து "ஆதனது பிரதியோகிக் குக் காரணத்துவம் அங்கீகரித்தலாற், பராமரி சத்துவம்சத்தின் கண்ணும் பராமரிசத்தாற் றேன்றுந் தன்மை யுண்மையின், ஆண்டுஅதி வியாத்தி நீக்குதற் பொருட்டு ஞானம் என் றுங் கூறப் பட்டது.

பராமரிச மாவது வியாத்தி விசிட்ட பக்க தருமத் தன்மை ஞானம். அஃது " வன்னி யின் வியாப்பிய மான தூம முடைத்து இஃ து." என்பது. அற்றேல், " வன்னியின் வியா ப்பியம் தூமம்." என்னும் வியாத்தி ஸ்மர ணம், " தூமம் உடைத்து பருப்பதம்." என் னும் பக்க தருமத் தன்மை ஞானம் ஆகிய ஞா னத்துவயத்தானுமே " பருப்பதம் வன்னி யுடைத்து" என்னும் அநுமிதி தோன்றலான் விசிட்ட பராமரிசம் அங்கீகரித்தல் கௌரவ மாமெனின் ;—ஆகா தென்க, " வன்னியின் வியாப்பியமாகிய தூமம் உடைத்து இஃது." என்னுஞ் சாத்தபரா மரி சத்தின் கட் பராமரி சம் ஆவசியகம் வேண்டப் படுதலான் யாண்

டும் பராமரி சத்திற்கே காரணத்துவம் அங்கீ கரித்தல் சாலவும் இலாகவ மாகலான்.

ஆதியின் மகானச முதலியவற்றிற் றூமத் தின்கண் வன்னி சாமாணுதி காணத்தைக் கிர கித்தவழித் "தூமம் வன்னியின் வியாப்பியம்" என்னும் ஞானமும், அதன் பின்னர் மற்றோர் பாணியிற் பருப்பதத்தின்கண் இடை விடாத மூலத்தை யுடையதூஉம் வியோமத்தைத் தீண்டுவதூஉம் ஆகிய தூமரேகையைக் கண் டுழி வியாத்தி ஸ்மரணமும், அனந்தரம் வியா த்தி விசிட்ட வைசிட்டிய ஞானமாகிய "வன் னியின் வியாப்பிய மாகிய தூமம் உடையது, இஃது" என்னும் மூன்றுவதாகிய இலிங்க பராமரிசமும், பக்கத் தன்மையோடு கூடிய வவ் விலிங்க பராமரிசத்தானே "பருப்பதம் வன்னி யுடைத்து" என்னும் அநுமிதி ஞான முந் தோன்று மென்க.

வியாத்தி யாவது எதுவின் அதிகரணத் துளதாகிய அத்தியந்தா பாவத்திற்கு அப்பிர தியோகி யாகிய சாத்தியத்தின் அதிகரணத்

துளதாதல். எங்ஙனம்:—"பருப் பதம் வன்னி யுடைத்து, தூம முண்மையான்." என்புழி ஏது தூமம், ஏதுவின் அதிகரணம் பருப்ப தம், ஆண்டு உளவாகிய அத்தியந் தாபாவம் கடாத்தியந் தாபாவ படாத்தியந் தாபாவங் கள், வன்னியின் அத்தியந் தாபாவம் ஆண்டு இன்று, வன்னி யாண்டே யுண்மையான், அவ் வத்தியந் தாபாவத்திற்குப் பிரதி யோகி கடபடங்கள், அப் பிரதி யோகி வன்னி, அவ் வன்னியினது அதிகரணம் பருப்பதம், அதன் கண் ஏதுவாகிய தூமம் உளதாதல் வியாத்தி யென்க.

"இவ் விருக்கம் கபி சையோக முடைத்து, திரவியத் தன்மையான்." என்புழித் திரவி யத் தன்மை யாகிய ஏதுவினது அதிகரண மாகிய விருக்கத்தின்கண் உளதாகிய கபி சை யோ காபாவத்திற்கு ஆண் டுள்ள கபி சை யோக மாகிய சாத்தியமே அப் பிரதியோகி யாகாது பிரதியோகியாய் விடுதலின், அவ்வியா த்தி தோடம் வருமென வுரையற்க, மேற்

கூறிய விலக்கண வாக்கியத்திற்குப் பிரதியோகி யில்லாத விடத்தின்கண் இருக்கப் பெற்ற, ஏதுவின் அதிகரணத் துளதாகிய, அத்தியந்தாபாவத்திற்கு அப்பிரதி யோகியாகிய சாத்தியத்தின் அதிகரணத்தின்கண் உளதாதல் என்பதே பொருளாதலான்.

அற்றேல், வியாத்திக்கு இலக்கணம் "ஏதுவானது சாத்தியத்தினது அபாவத்தை யுடைய வதிகரணத்தின்கண் விருத்தி யின்மை." எனக் கூறின் என்னை யெனின்;— அது பொருந்தாது, "பருப்பதம் வன்னி யுடைத்து, தூமம் உண்மையான்." என்புழித் தூமம் வன்னியினது அபாவத்தை யுடைய அதிகரணமாகிய தடாகத்தின்கண் இன்றி வன்னியினது அதிகரணமாகிய பூதரத்தின்கண் உண்மையான் இலக்கணம் முடிவு பெறுமேனும், "இது வாச்சியம், ஞேயத்தன்மையான்." என்புழி வாச்சியத்தினது அபாவத்தை யுடைய வதிகரணமாகிய விபக்கம் வேறின்மையின் அவ்வியாத்தி தோடம் வருதலான், என்க.

பக்க தரும மாவது அநுமிதி யிச்சையின் அபாவ விசிட்ட சாத்திய நிச்சயாபாவம். தாகத்தைக் குறித்து மணிக்குப் பிரதி பந்தகத்துவமும், மணியினது அபாவத்திற்குக் காரணத்துவமும் அங்கீகரிப்பின், உத்தேசகம் உள்வழி மணி ரூப மாகிய பிரதி பந்தகம் உள்வழியுந் தாக ரூப மாகிய காரியந் தோன்றுதலான் அது பற்றி உத்தேச காபாவ விசிட்ட மணிக்குப் பிரதிபந்தகத்துவமும் உத்தேச காபாவ விசிட்ட மணியினது அபாவத்திற்குக் காரணத்துவமும் அங்கீகரித்தாங்கு, அநுமிதியைக் குறித்துச் சித்திக்குப் பிரதிபந்தகத்துவமும் சித்தியினது அபாவத்திற்குக் காரணத்துவமும் அங்கீகரிப்பின் அநுமிதி யிச்சை யுள்வழிச் சித்தி ரூப மாகிய பிரதிபந்தகம் உள்வழியும் அநுமிதி ரூப காரியந் தோன்றுதலான் அது பற்றி அநுமிதி யிச்சா பாவ விசிட்ட சித்திக்குப் பிரதி பந்தகத்துவமும் அநுமிதி யிச்சா பாவ விசிட்ட சித்தியினது அபாவத்திற்குக் காரணத்துவமும் அங்கீகரித்தல் வேண்டுமென்க.

அநுமானம் சுவார்த் தாநுமானம் பரார்த் தாநுமானம் என விரு வகைத்து. சுவார்த் தாநுமானத்தைத் தன் பொருட் டநுமான மென்றும் பரார்த் தாநுமானத்தைப் பிறர் பொருட் டநுமான மென்றுங் கூறுப.

அவற்றுள் சுவார்த் தாநுமான மாவது தன து வியாப்பிய முதலிய ஞானத்தாற் சாதிக்கத் தகுந்தது. ஈண்டுச் சத்தப் பிரயோக மின்று. மற்றியாண்டுச் சத்தப் பிரயோக மெனின், பிறர்க்கு ஞானந் தோன்றுதற்குக் காரண மாகிய பரார்த் தாநுமானத்தின்கண் என்க.

பரார்த் தாநுமான மாவது தான் தூமத் தால் வன்னியை யநுமித்துப் பிறர் உணர்தற் பொருட்டுப் பஞ்சாவயவ வாக்கியத்தைக் கூறுவது. அது "பருப்பதம் வன்னி யுடைத்து, தூமம் உடைமையான், யாது யாது தூமம் உடைத்து அது அது வன்னி யுடைத்து மகானசம் போல, இதுவும் அங்ஙனம், ஆகலின் இங்ஙனம்." எனவரும்.

பஞ்சாவயவங்களாவன பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமனம் என்பன.

அவற்றுட், பிரதிஞ்ஞை யாவது சாத்திய முடைத்தாகப் பக்கத்தைக் கூறுவது. எங்ஙனம்:—“ பருப்பதம் வன்னி யுடைத்து.” என்பது.

ஏது வாவது பஞ்சமி யந்த மாகவேனும் திருதீயாந்த மாகவேனும் இலிங்கத்தைப் பிரதிபாதிப்பது. எங்ஙனம்:—“ தூமம் உடைமையின்.” என்பது.

உதாரண மாவது வியாத்தியைப் பிரதிபாதிக்கும் வசனம். எங்ஙனம்:—“ யாது யாது தூமம் உடைத்து அது அது வன்னி யுடைத்து மகானசம் போல.” என்பது.

உபநய மாவது வியாத்தி விசிட்ட மாகிய விலிங்கத்தைப் பிரதி பாதிக்கும் வசனம். எங்ஙனம் :—“ வன்னியின் வியாப்பிய மான தூமம் உடைத்து இஃது” என்பது.

நிகமன மாவது சாதன சாத்திய முடையதாகப் பக்கத்தைப் பிரதி பாதிக்கும் வசனம்.

எங்ஙனம் :—" ஆகலின் இது வன்னியுடைத்து." என்பது.

## இலிங்கப் பிரக்கிரியை.

அவ் வநுமானம், கேவ லாந்நுவயி, கேவல வெதிரேகி, அந்நுவய வெதிரேகி யென்னும் வேறுபாட்டான் மூவகைத்து.

அவற்றுட் கேவலாந்நுவயி யாவது சாத்தியத்தின் அபாவம் யாண்டும் இல்லாதது. அந்நுவய வியாத்தி மாத்திரம் உடையது கேவலாந்நுவயி எனினுமாம். அஃது எங்ஙனம்:—"கடம் அபிதேயம் பிரமேயத் தன்மையான், படம்போல" எனவரும். ஈண்டுக் கடம்பக்கம், அபிதேயத்தன்மை சாத்தியம், பிரமேயத் தன்மை யேது, படம் திருட்டாந்தம். அபிதேயத் தன்மையாகிய சாத்தியத்தினது வெதிரேகம் அப்பிரசித்தம் சர்வமும் அபிதேய மாகலான்.

கேவல வெதிரேகியாவது சாத்தியத்தினது பிரசித்தி பக்க பின்னத்தின் கண் இல்லாதது. வெதிரேக வியாத்தி மாத்திரம் உடையது கேவல வெதிரேகி எனினுமாம். அஃது எங்ங

ணம்:—"பிருதிவி இதரபேதத்தை யுடையது, கந்தம் உண்மையின், யாண்டு யாண்டு இதர பேதம் இன்று ஆண்டு ஆண்டுக் கந்த முண் மையும் இன்று சல முதலியவற்றின்கட் போல; இஃது அங்ஙன மன்று, ஆகலின் இங்ஙன மன்று." என வரும். ஈண்டு யாது கந்த முடைத்து அது இதரபேத முடைத்து, இது போல என அந்நுவய திருட்டாந்தம் இன்று, பிருதிவி யனைத்தும் பக்கமே யாகலான்.

அற்றேல், இதர பேதம் பிரசித்தமா? அன்றா? பிரசித்த மெனின், யாண்டுப் பிரசித் தம் ஆண்டு ஏது வுண்டாயின் அந்நுவய முடைத்தாதல் கூடும்; ஆண்டு ஏது வின்றாயின் அசாதாரண வனைகாந்திகமாம்; அன்றாயின், சாத்திய ஞானம் இன்மையான் அதனான் விசேடிக்கப்படும் அநுமிதி ஞானம் எங்ஙனந் தோன்றும், விசேடண ஞானம் இன்றி விசேடிய ஞானந் தோன்றாமையான்; அன்றியும் பிரதியோகி ஞானம் இன்மையான் வெதிரேக வியாத்திஞானமும் உண்டாகாமையான்

எனின்;—அற்றன்று, சலமுதலிய பதின்மூன் றன்கண்ணும் அந்நி யோந்நி யாபாவம் உள வாம் அன்றே, அப் பதின்மூன்றன் கண்ணும் தனித் தனி பிரசித்தங்களா யிருக்கின்ற பேதம் பின்னர்ப் பிருதிவியின்கண் ஒருங்கு சாதிக்கப் படும் ஆகலான், என்க. பதின்மூன்றன் றன்மை யான் வரைந்து கொள்ளப்பட்ட பேதரூப மா கிய சாத்தியம் ஓர் அதிகரணத்தின்கண் இரா மையின் அந்நுவயமுடைத்தாகாமையும் சாதா ரணவனைகாந்திக மின்மையும் உணர்க. தனித் தனி யதிகரணத்து முன்னர்ப் பிரசித்தமாகலா ன் சாத்திய விசேடணத்தான் அடுத்த அநுமிதி ஞானமுங்கூடும், வெதிரேக வியாத்தியும் உ ண்டு என்க.

இலக்கியத்தின் ஏகதேசத்தின்கண் இலக்க ணம் இல்லாமை யாகிய அவ்வியாத்தியும், இ லக்கியத்தின் கண்ணும் அலக்கியத்தின் கண் ணும் இலக்கணம் இருத்த லாகிய அதிவியாத் யும், இலக்கிய மனைத்தின் கண்ணும் இலக்க ணம் இல்லாமை யாகிய அசம்பவமும் ஆகிய

மூவகைத் தோடங்கள் இல்லாத தர்மம் எனப் படும் இல்க்கணமுங் கேவல வெதிரேகி யேது வே. "திரவியம் இதர பேத முடைத்து, குண முடைமையின் யாது இதர பேத முடைய தன்று அது குண முடைய தன்று, குணம் போல, இஃது அங்ஙன மன்று, ஆகலின் இங்ஙன மன்று." என்பதனால் இக் கேவல வெதிரேகி யேதுவாகிய குண முடைமையே திரவியத்திற்கு இலக்கணமாயிற்று, பிறவற்றினின்றும் வேறு படுப்பதே இலக்கணம் ஆகலான்.

அற்றேல், "உற்பன்ன மாகிய திரவியம் ஒரு கணங் குணமிலது." ஆகலான் முதற் கணத்திற் றோன்றிய கடத் திரவியத்தின்கட் குண ரூப வேது வின்மையாற் சொரூபா சித்தியும், இதர பேத ரூப சாத்தியா பாவத்தை யுடைய விபக்க மாகிய குணத்தின் கண்ணும் "உருவம் ஒன்று சுவையின் வேறு." என்னும் வழக்குண்மையின் ஏது வுண்மையான் வியபிசாரமும் வருதலான் இதர பேத அநு

மிதி ஞான முண்டாகாமையிற் குணமுடை
மை திரவியத்திற் கிலக்கணமாதல் செல்லா
தெனின்;—அற்றன்று, குணத்தோடு சமானா
தி காரணமாய்ச் சத்தையின் வியாப்பியமான
சாதி யுடைமை யென்பது கருத்தாகலானும்,
ஒரு பொருளோடு சமவேதித்து நிற்றல் பற்றி
யவ்வாறு வழங்குவ தன்றிக் குணத்தின்கட் கு
ணம் இன்மை யானும் சொரூபா சித்தியும் வி
யபிசாரமும் இன்மையான், அநுமிதி ஞானந்
தோன்றல் கூடுமாகலின், என்க.

அந்நுவய வெதிரேகி யாவது சாத்தியமுஞ்
சாத்தி யாபாவமும் பக்க பின்னத்திற் பிரசித்
தமாயது; அந்நுவய வியாத்தி வெதிரேக வியா
த்தி என்னும் இரண்டு வியாத்தி யுடையதெ
னினு மாம். சாதனத்திற்குஞ் சாத்தியத்திற்
கும் உளதாய வியாத்தி அந்நுவய வியாத்தி
யெனவுஞ், சாத்தி யாபாவத்திற்குஞ் சாதனா
பாவத்திற்கும் உளதாய வியாத்தி வெதிரேக
வியாத்தி யெனவும், அந்நுவய வியாத்தியிற்
சாதனம் வியாப்பியம் சாத்தியம் வியாபகம்

எனவும், வெதிரேக வியாத்தியிற் சாத்தியா பாவம் வியாப்பியம் சாத ஞபாவம் வியாபகம் எனவும், வியாப்பியத்தின் வசனத்தை முன் னும் வியாபகத்தின் வசனத்தைப் பின்னுங் கூ றல் வேண்டும் எனவும் உணர்க. எங்ஙனம்:— "பருப்பதம் வன்னி யுடைத்து, தூம முடை மையின்." என்புழி வன்னியைச் சாதிக்கும் வழித் தூம முடைமை அந்நுவய வெதிரேகி யேது, "யாது யாது தூமம் உடைத்து அது அது வன்னி யுடைத்து மாகானசம் போல." என அந்நுவய வியாத்தியும், "யாது யாது வன்னி யுடைய தன்று அது அது தூம மு டையது மன்று தடாகம் போல." என வெதி ரேக வியாத்தியும் உண்மையான்.

பக்க சத்துவம், சபக்க சத்துவம், விபக்க வியா விருத்தித்துவம், அபாதிதத்துவம், அ சற் பிரதி பக்கத்துவம் என்பன பஞ்ச ரூபங் கள்.

அந்நுவய வெதிரேகி யேதுவிற் பஞ்ச ரூப த்தோடு கூடியிருக்குகை ஆவசியகம் அபேட்

சிக்கத்தக்கது. கேவலாந்துவயி யேதுவில் விபக்க வியா விருத்தித்துவம் இன்மையும், கேவல வெதிரேகி யேதுவிற் சபக்க விருத்தித்துவம் இன்மையும் உண்மையின் அவ்விரண் டேதுவின் கண்ணும் ரூப சதுட்டயமே யபேட்சிக்கத் தக்கது.

சாத்திய சந்தேகத்தையுடைய வதிகரணம் பக்கம். சாத்திய நிச்சயத்தையுடைய வதிகரணம் சபக்கம். சாத்தி யாபாவ நிச்சயத்தையுடைய வதிகரணம் விபக்கம். சாத்தியாபாவத்தையுடைய பக்கம் பாதன். சாத்தியத்தின் அபாவத்தைச் சாதிக்கும் ஏது சற்பிரதிபக்கம்.

சோபாதிக வேதுவிற் பக்க சத்துவம் முதலியவற்றின் ஒன்று இரண்டனது அபாவம் ஆவசியகம் உண்டு. சோபாதியும் சுவ வியபிசரிதத் தன்மையாகிய சம்பந்தத்தானே உபாதியோடு கூடினது. உபாதியாவது சாதனத்திற்கு அவ் வியாபகமாய்ச் சாத்தியத்திற்கு வியாபக மாயது. சாதனத்திற்கு அவ்வியாபக

மாதல் சாதனத்தினது அதிகரணத்தின்கண் உள்ள அத்தியந்தா பாவத்திற்குப் பிரதியோ கி யாதல். சாத்தியத்திற்கு வியாபக மாதல் சாத்தியத்தினது அதிகரணத்தின்கண் உள்ள அத்தியந்தா பாவத்திற்கு அப் பிரதி யோகி யாதல் "பருப்பதம் தூமம் உடைத்து, வன்னி யுடைமையின்" என்னும் வழி ஆர்த்திரேந்தன சையோகம் உபாதி, அது "யாண்டுத் தூமம் உண்டு ஆண்டு ஈர விறகின்சையோகம் உண்டு" எனச் சாத்திய மாகிய தூமத்தினது அதிகரணத்தின்கண் உள்ள அத்தியந்தா பாவத்திற்கு அப் பிரதி யோகி யாகியும், "யாண்டு வன்னி யுண்டு ஆண்டு ஈர விந்தனத்தின் சையோகம் இன்று, ஒழுகக் காய்ச்சிய விரும்பின்கண் ஈர விந்தனம் இன்மையின்" எனச் சாதனமாகிய வன்னியினது அதிகரணத்தின் கண் உள்ள அத்தி யந்தா பாவத்திற்குப் பிரதியோகி யாகியும் இருத்தலான்.

அவ் வுபாதியும், சாதனத்திற்கு அவ்வியாபகமாய்ச் சுத்த சாத்தியத்திற்கு வியாபக மா

வதூஉம், சாதனத்திற்கு அவ்வியாபகமாய்ப் பக்க தருமத்தன்மையோடு கூடிய சாத்தியத்திற்கு வியாபக மாவதூஉம், சாதனத்திற்கு அவ்வியாபகமாய்ச் சாதனத்தோடு கூடிய சாத்தியத்திற்கு வியாபக மாவதூஉம் என மூவகைத்து. அவற்றுள், முதலது எங்ஙனம்:—"அயோ கோளகம் தூமத்தை யுடைத்து, வன்னி யுடைமையான்." ஈண்டு ஈரவிந்தனத்தினின்றுந் தோன்றும் வன்னி யுடைமை உபாதி. இரண்டாவது எங்ஙனம்:—"வாயு பிரத்தியக்கம், பிரத்தியக்க பரிசத்திற் காசிரயமா யிருத்தலான்" ஈண்டுப் பகிர்த் திரவியத் தன்மையோடு கூடிய பிரத்தியக்க விடயத் தன்மையாகிய சாத்தியத்திற்கு வியாபகம் உற்பூத ரூப முடைமை உபாதி. மூன்றாவது எங்ஙனம்:—"அழிவு பாட்டபாவம் நாச முடைத்து, சன்னியத் தன்மையான்." ஈண்டுச் சன்னியத் தன்மை யோடு கூடிய நாசத் தன்மைக்கு வியாபகம் பாவத் தன்மை உபாதி.

## ஏத்துவாபாசப் பிரக்கிரியை.

அநுமிதி ஞானத்திற்குப் பிரதிபந்தகமாகிய யதார்த் தாநுபவ விடயத் தன்மை ஏத்து வாபாசத் தன்மை. அது சவ்வியபிசாரம், விருத்தம், சற்பிரதிபக்கம், அசித்தம், பாதி தம் என ஐ வகைத்து.

### சவ்வியபிசாரம்.

அவற்றுட் சவ்வியபிசார மாவது சாதார ணாதி யங்கியதமத் தன்மை. அது சாதாரணம் அசாதராணம், அநுபசங்காரி என்னும் பேத த்தான் மூவகைத்து.

அவற்றுட், சாத்தியத்தின் அபாவத்தையு டைய வதிகரணத்தின்கண் இருத்தற் றன்மை சாதாரணத் தன்மை. எங்ஙனம்:—"பருப்ப தம் தூம முடைத்து, வன்னி யுடைமையான்." என்பது. ஈண்டு ஏது வாகிய வன்னியானது சாத்திய மாகிய தூமா பாவத்தையுடைய விப க்கத்தின்கண் விருத்தியின்மை யென்னும் வி யாத்தி ஞானப் பிரதிபந்தகம் பலம், வன்னி ரூபமாகிய விலிங்கத்தில் தூமா பாவத்தை யு

டைய விபக்கமாகிய அயோ கோளகத்தின் கண் விருத்தித் தன்மையாகிய வியபிசாரங் கிரகிக்கப் படுதலான்.

சகல சபக்க விபக்கங்களின் இன்மைத் தன்மை அசாதாரணத் தன்மை. பக்க மாத்திர விருத்தித் தன்மை யெனினுமாம். எங்ஙனம்:—“பருப்பதம் வன்னியுடைத்து, பருப்பதத் தன்மையான்.” என்பது. ஈண்டு ஏதுவானது சாத்தியத்தினது அதிகரணத்தின் கண் இருத்தற் றன்மை என்னும் வியாத்தி ஞானப் பிரதி பந்தகம் பல்ம், பருப்பதத் தன்மை யாகிய சாதனத்தின் கண், வன்னி யாகிய சாத்தியத்தையுடைய சபக்கமாகிய மகானச முதல்ய வற்றில் விருத்தி யின்மைத் தன்மை, நிச்சயிக்கப் படுதலான்.

சர்வமும் பக்க மாதற் றன்மை அநுபசங்காரித் தன்மை. எங்ஙனம்:—“சர்வம் அபிதேயம், பிரமேயத் தன்மை யான்.” என்பது. ஈண்டு வியாத்தி சஞ்சயத்தைத் தோற்றுவித்தல் வழியாக வியாத்தி ஞானப் பிரதி பந்தகம்

பலம், அந்நுவய வியாத்தி வெதிரேக வியாத்திகளின் சாமக்கிரி யின்மையின், அந்நுவய திருட்டாந்தமும் வெதிரேக திருட்டாந்தமும் இன்மையான்.

## விருத்தம்.

சாத்தியத்தின் அபாவத்திற்கு வியாப்பியமான வேது விருத்த வேது. எங்ஙனம்:—"கடம் நித்தியம், சாவயவத் தன்மையான்." என்பது. ஈண்டு உத்தேசியம் விசேடிய மாகவும் சாத்தியம் பிரகாரமாகவுந் தோன்றும் அனுமிதிப் பிரதி பந்தகம் பலம், உத்தேசியம் விசேடியமாகவும் சாத்தியத்தினது அபாவத்திற்கு வியாப்பியமாகிய சாதனம் பிரகாரமாகவுந் தோன்றும் ஞானமாகலான்.

## சற்பிரதிபக்கம்.

சாத்தியத்தினது அபாவத்தைச் சாதிக்கும் வேறோரேது வினையுடைய வேது சற்பிரதி பக்கம். எங்ஙனம்:—"சத்தம் நித்தியம், செவிக்குப் புலனாதலின், சத்தத் தன்மை போலும். சத்தம் அநித்தியம், காரியப் பாட்டால்,

கடம் போலும்." விருத்த வேதுவிற்கு எங்ஙனம் அநுமிதிப் பிரதிபந்தகம் பலமோ அங்ஙனமே சற்பிரதிபக்க வேத்துவா பாசத்திற்கும் அநுமிதிப் பிரதிபந்தகம் பலம். பின்னர்ப் பேதம் என்னையோவெனின் விருத்தவேத்துவா பாசத்திற்குச் சாதனம் ஒன்றெனவும், சற்பிரதிபக்க வேத்துவா பாசத்திற்குச் சாதனம் இரண்டெனவும் உணர்க.

## அசித்தம்.

அசித்தமாவது ஆசிரயா சித்தியாதி யங்கியதமத் தன்மை. அது ஆசிரயாசித்தம், சொரூபாசித்தம், வியாப்பியத் தன்மை யசித்தம் என மூவகைத்து.

யாண்டுப் பக்கம் அசித்தமோ அது ஆசிரயாசித்தம்: அது "சச விடாணம் நித்தியம், அசன்னிய மாகலின்." என்பது. ஈண்டுச் சசத் தன்மையோடு கூடிய விடாணத்தில் நித்தியத் தன்மையாகிய அநுமிதிப் பிரதிபந்தகம் பலம், விடாணத்தின் கண் சசத்துவாபாவம் நிச்சயிக்கப்படுதலின்.

பக்கத்தின்கண் ஏது வில்லது சொரூபாசி த்தம்:—அது "பருப்பதம் வன்னி யுடைத்து மகானசத் தன்மையான்." என்பது.

அதுவும் விசேடணாசித்தம், விசேடியாசி த்தம், பாகாசித்தம் என்னும் பேதத்தான் மூ வகைத்து. முதலாவது எங்ஙனம்:—"சத்தம் அநித்தியம், சட்சு சங்கியப் பிரத்தியக்க விட யத் தன்மையோடு கூடிய உற்பத்தித் தன் மையான்." எனவரும். இரண்டாவது எங்ங னம்:— சத்தம் அநித்தியம், குணத்தன்மை யோடு கூடிய பரமாணு விருத்தித் தன்மை யான்." எனவரும் மூன்றாவது எங்ஙனம்:— "இவை திரவியம் அவயவம் இன்மையின்." எனவரும். ஈண்டுப் பக்கம் விசேடிய மாகவும் ஏது பிரகார மாகவுந் தோன்றும் பராமரிசப் பிரதிபந்தகம் பலம், ஏதுவின் அபாவத்தோடு கூடிய பக்க ஞானமா யிருத்தலான்.

உபாதியை யுடைய வேது வியாப்பியத் த ன்மை யசித்தம். எங்ஙனம்:—"அயோ கோ ளகம் தூம முடைத்து, வன்னி யுடைமையி

ன்." என்பது. ஈண்டு வன்னியிற் றூமத்தின் அபாவத்தை யுடைய விடத்தில் விருத்தி யின்மைத் தன்மை ரூபமா யுள்ள வியாத்தி ஞானப் பிரதி பந்தகம் பலம், தூமத்தின் அபாவத்தை யுடைய விடத்து விருத்தி யின்மையின் அபாவ ரூப தூம வியபிசாரங் கிரகிக்கப்படுதலான்.

## பாதிதம்.

சாத்தியத்தின் அபாவத்தையுடைய பக்கம் பாதிதம். எங்ஙனம்:—"தடாகம் வன்னி யுடைத்து, திரவியத் தன்மையான்." என்பது. ஈண்டுப் பக்கம் விசேடிய மாகவும் சாத்தியம் பிரகார மாகவுந் தோன்றும் அநுமிதிப் பிரதி பந்தகம் பலம், பிரத்தியக்க மாகச் சாத்தி யாபாவ நிச்சயம் பிறத்தலான்.

மேற் கூறப்பட்ட தோடங்கள் இல்லாத வேது சத்தேது.

அநுமான நிரூபணம் முடிந்தது.



## உபமான நிருபணம்.



உபமானமாவது உபமிதி ஞானத்திற்குக் கரணம், கவய சத்தார்த்தத்தை உணராதோன் ஆகிய ஓர் நாகரிகன் கவயம் எத்தன்மைத்தென்று வினவ, ஓர் ஆரணியக புருடன் "கோவினை நிகர்த்தது கவயம்" என்று உரைக்கக் கேட்டு ஆரணியத்தை யடைந்தானாக, கோசதிருசமான பிண்டத்தைக் கண்டு ஆரணியக புருடனால் உரைக்கப்பட்ட வாக்கியார்த்தத்தை நினைத்ததன் பின்னர் "கவயம் கவயபதவாச்சியம்" என்னும் உபமிதி ஞானந் தோன்றும். அதுவே பலம் என்க. வாக்கியார்த்த ஸ்மரணம் வியாபாரம்.

உபமான நிருபணம் முடிந்தது.



## சத்த நிருபணம்.



ஆத்தனால் உச்சரிக்கப்பட்ட வாக்கியம் சத்தம். அநாத்தனால் உச்சரிக்கப்பட்ட வாக்கிய

த்தின் கண் அதிவியாத்தி நீக்குதற் பொருட்டு, ஆத்தனால் உச்சரிக்கப்பட்ட என்றும், சபகடத முதலிய வற்றின்கண் அதி வியாத்தி நீக்குதற் பொருட்டு வாக்கியம் என்றுங் கூறப்பட்டது. பிரகிருத வாக்கியார்த்த கோசரமாகிய யதார்த்த ஞானத்தை யுடையான் ஆத்தன். ஈண்டுப் பத ஞானம் கரணம் எனவும், பதார்த்த ஞானம் வியாபாரம் எனவும், சாத்த போதம் பலம் எனவும் உணர்க. ஞான விடயமாகிய பதம் கரணம் என்றல் பொருந்தாது, பதம் இல்வழியும் மௌனியது சுலோகம் சேட்டை முதலியவற்றான் சாத்த போதம் உண்டாகலான்.

பதார்த்த ஞானம் என்புழிப் பதத்தான் உண்டாகும் பதார்த்த ஞானம் என்க. அன்றேல், பத ஞானத்தை யுடையாற்குப் பிரத்தியக்க முதலியவற்றானே பதார்த்த ஞானத்தின் கண்ணும் சாத்த போதம் உண்டாக வெனல் வேண்டுதலான். ஈண்டும் பதத்திற்கு விருத்தியான் என்னும் விசேடணங் கொடுத்தல்

வேண்டும், அல்லாக்கால் கடமுதலிய பதங்க ளானே ஆகாசத்திற்கும் சாத்தபோதம் உண் டாக வேண்டுமாதலால், சமவாய சம்பந்தத் தானே ஆகாசத்திற்கும் ஸ்மரணம் உண்டாக லான்.

## விருத்தி.

விருத்தியாவது சத்தி இலக்கணை யென்னு ம் இரண்டனுள் ஒன்றாந்தன்மை. விருத்தி ஞானம் இன்றிச் சத்த ஞானத்தானே யந்நுவ ய போதந் தோன்றல் இன்று. அவ்விருத்தி யும் சத்தி இலக்கணை என்னும் வேறுபாட் டான் இருவகைத்து.

## சத்தி.

சத்தியாவது "இப்பதத்தானே இவ்வர்த் தம் போதிக்கத்தக்கது." என்னும் ஈசுரனது சங்கேதம். சங்கேதம் இச்சை. கடமுதலிய பதங்கட்குக் கம்புக் கிரீவாதி மத்துக்களாகிய பிண்ட முதலியவற்றின் கட் சத்தி. ஆதுனிக ரது நாமத்தின் கண்ணுஞ் சத்தி யுளது, "பதி னோராம் நாட்டந்தை நாமகரணஞ் செய்யக்

கடவன் பாரின்." என்னும் ஈசுரனது சங்கே தம் ஆண்டும் உண்மையான், "ஆதுனிகரது சங்கேதத்தின்கட் சத்தி யின்று" என்று சிலர் கூறுப. இனி நவீனர் "ஈசுரனது சங்கேதஞ் சத்தி யன்று. சங்கேதமே சத்தியாகலின் ஆ துனிகரது நாமத்தின்கண்ணுஞ் சத்தி யுண்டு" என்ப.

## சத்திக்கிரகணப் பிரக்கிரியை.

சத்தியானது வியவகாரம், விவரணம், கோ சம், சித்த பத சாந்நித்தியம், வியாகரணம், ஆத்த வாக்கியம், உபமானம், வாக்கிய சேடம் என்பவற்ருற் கிரகிக்கப்படும்.

### இதற்குச் செய்யுள்.

வியவகாரம்விவகரணங்கோசமே
யியலுஞ்சந்நிதானமிலக்கணம்
உயருறாமுபதேசநல்லொப்புமை
கயமிலாற்றலைச்சேடங்கழறுமே.

பிரயோசக விருத்தனுற் கூறப்பட்ட "கட த்தைக் கொணர்க." என்னும் வாக்கியத்தைக் கேட்டுப் பிரயோச்சிய விருத்தனுற் கடங்கொ

ணரப் பட்டமையக் கண்டு பக்கத்தின் கண் ணின்ற பாலன், கடத்தைக் கொணர்தலாகிய காரியம் "கடத்தைக் கொணர்க" என்னும் வாக்கியத்தாற் பிரேரிக்கப்பட்ட தெனத் துணிந்து மறித்தும் "கடத்தைக் கொடு செல்க." "படத்தைக் கொணர்க" என்பது முதலிய வாக்கியங்களில் ஆவாப உத்துவாபங்களானே கட பட முதலிய பதங்கட்குக் காரியத் தோடு இயைந்த கட பட முதலியவற்றின்கட் சத்தி கிரகித்துக் கொள்ளும். இதுவே விவகாரத் தாற் சத்திக் கிரகணம்.

விவரணமாவது அதற்குச் சமானமாகிய அர்த்தத்தை யுடைய பதாந்தரத்தினாலே அதன் அர்த்தத்தைக் கூறுதல். அது "கடம் உளது" என்புழிக் கலசம் உளது என்பது.

கோசத்தாற் சத்திக் கிரகணமாவது பதப் பொருளுணர்த்தும் நூலாகிய நிகண்டு முதலியவற்றால் அர்த்தத்தைக் கிரகித்தல். எங்ஙனம்:—"சங்கரன் பசுபதி சம்பு" "பகவான் சிவனரி பிரமன்" எனவரும்.

சித்தபத சாந்நித்தியத்தாற் சத்திக் கிரகண ம் எங்ஙனம் :—" தேமாந் தருவிற் பிகம் இருந்து சிந்தை களிப்பக் கூவியதால்" என்புழிப் பிகம் என்னும் அப்பிர சித்தமாகிய பதத்திற்கு பிரசித்த பதங்களாகிய தேமா தரு சிந்தை கூவியது முதலிய வற்றின் சாந் நித்தியத்தினுலே குயிலின்கட் சத்தி கிரகிக்கப் பட்டதென்க.

வியாகரணமாவது கடைநிலை, இடைநிலை, முதனிலை முதலிய வற்றின் அர்த்தத்தை உணர்த்திப் பதங்களின் சொரூபமும், அர்த்தமும் நிச்ச யிக்கும் நூல். எங்ஙனம் :—" னஃகா னொற்றே யாடூஉவறிசொல்."

ஆத்த வாக்கியமாவது யதார்த்தங் கூறுவோன் வாக்கியம். அது " இது கடம்." " இது படம்." என அவ்வவ்வியத்திகளைக் காட்டிப் பதங்களைக் கூறுதல்.

உபமானமாவது ஒப்புமை யுணர்வு. 'கோவினை யொக்குங் கவயம்' என்னும் அதிதேச வாக்கியார்த்தத்தோடு கூடிக் கோவையொத்

த பிண்டத்தைக் கண்டுழிக் கவய பதத்திற்குக் கவயரூப பிண்டத்தில் சத்தி கிரகிக்கப் படும்.

வாக்கிய சேடமாவது ஓர் வாக்கியத்தின் கண் உள்ள பதத்தைச் சந்தேக மற நிச்சயித் தற்கு அநுகூலமாகிய சேடவாக்கியம். எங்ஙனம்:—"யவ மய மாகிய சரு வாகின்றது." என்னும் வாக்கியத்தின்கண் உள்ள யவ பதத்தை ஆரியர் தீர்க்க சூக விசிட்டத்தின்கண்ணு ம் மிலேச்சர் கங்குவின்கண்ணும் பிரயோகித் தலாற் சந்தேகம் நிகழ்ந்துழி "வசந்த காலத் துச் சருவ சசியங்களின் பத்திரங்களும் உதிர் கின்றன; கணிச சாலியாகிய யவம் மதர்த்து நிற்கின்றது." என்னுஞ் சேட வாக்கியத்தானே தீர்க்க சூக விசிட்டத்தின்கண் அதற்குச் சத்தி நிச்சயிக்கப்படுகின்றது. அநேக சத்தி கற்பித் தல் கௌரவமாகலாற் கங்குவின்கட் சத்தி பி ரமத்தாற் பிரயோகிக்கப் பட்டதெனவும், விநி கமகம் இன்மையான் அரிபத முதலியவற்றின் கண் அநேக சத்தி கற்பிக்கப் பட்டதெனவும் உணர்க.

மீமாஞ்சகர் நாக்கிரகீத விசேடண நியாயத்தாலும், இலாகவத்தாலும், சாதியின்கண் மாத்திரமே சத்தியென்றும், ஓர் வியத்தியின்கட் சத்தி யங்கீகரிப்பிற் சத்தி கிரகிக்கப்படாத வியத்தியின்கண்ணுஞ் சாத்தபோத முண்டாகலான் வியபிசாரமும், சர்வ வியத்தியின் கண்ணுஞ் சத்தி யங்கீகரிப்பின் வியத்தி பேதத்தானே சாதியும் பேதமாகலான் ஆனந்தியமும் உளவாமாகலான், வியத்தியின்கட் சத்தி யங்கீகரித்தல் கூடாதென்றும், வியத்திஞானம் இன்றிச் சாதிஞானம் உண்டாகாமையான் வியத்திஞானமுங் கூட உண்டாகின்றதென்றுங் கூறுப. அது பொருந்தாது, சத்தியின்றி வியத்திஞானம் உண்டாகாமையாற் சாத்த போதத்தைக்குறித்துப் பதசன்னிய பதார்த்த ஞானம் வியாபாரமாகலான். வியத்தியின்கண் இலக்கணையும் அன்று அநுபத்திப் பிரதிசந்தானம் இன்றியும் வியத்தி போதம் உண்டாகலான். வியத்தியிற் சத்தி யங்கீகரிப்பின் ஆனந்தியம் இன்று, சகலவியத்தியின் கண்ணும் ஒருசத்தி

யே யங்கீகரித்தலான். ஆகலாற் சாதி விசிட்ட வியத்தியின் கண்ணே சத்தி கிரகிக்கப்படும் என்றுணர்க.

சத்தம் பதம். அதுவும் யௌகிகம், ரூடம், யோகரூடம், யௌகிகரூடம் என நான்குவகைத்து.

சமுதாய சத்தியின்றி அவயவ சத்தியானே பதார்த்த ஞானம் உண்டாயின் யௌகிகம் எனப்படும். பாசகபதம் யௌகிகம், அவயவ சத்தியானே யோகார்த்தமாகிய பாகஞ்செய்வானை யுணர்த்துதலான்.

அவயவ சத்தியின்றிச் சமுதாய சத்தியினுல் மாத்திரம் பதார்த்தஞானம் உண்டாயின் ரூடம் எனப்படும். விப்பிரபதம் ரூடம், சமுதாய சத்தியானே ரூடி அர்த்தமாகிய பிராமணனை உணர்த்துதலான்.

சமுதாய சத்தியானும் அவயவசத்தியானும் ஏகார்த்தத்திற்கு ஞானம் உண்டாயின் யோகரூடம் எனப்படும். பங்கச பதம் யோகரூடம், பத்மத்தன்மை ரூபமாகிய சமுதாய சத்தியா

லும் பங்கதுலும் சனித்தது என்கிற அவயவச
த்தியானும் யோகரூடி யர்த்தமாகிய தாமரை
யை யுணர்த்தலான்.

யோகத்தானே அந்நியார்த்தத்திற்கும் ரூடி
யானே அந்நியார்த்தத்திற்கும் ஞானம் உண்
டாயின் யௌகிக ரூடம் எனப்படும். உற்பித்
என்னும் பதம் யௌகிக ரூடம், யோகத்தா
னே தருலதை முதலியவற்றையும், ரூடியா
னே யாக விசேடத்தையும் உணர்த்தலான்.

# இலக்கணைப் பிரக்கிரியை.

அந்நுவய ஞானமேனுந் தாற்பரிய ஞான
மேனும் இல்லாமையே யிலக்கணைக்குக் கார
ணம். சக்கிய சம்பந்தம் இலக்கணை. அது
கௌணீ சுத்தை யென விருவகைத்து.

அவற்றுட் கௌணியாவது சாதிருசிய விசி
ட்டத்தின்கண் இலக்கணை. அது "சிங்கம் மா
ணாக்கன்." என்பது. ஈண்டுச் சிங்க பதத்திற்
குச் சிங்க சாதிருசிய விசிட்டத்தின் கண் இல
க்கணை.

சுத்தை விட்ட விலக்கணை, விடாத விலக்

கணை, விட்டும் விடாத விலக்கணை யென மூவ கைத்து.

வாச்சியார்த்தத்திற்கு அந்நுவயம் இல்லாத விடத்து விட்ட விலக்கணை. எங்ஙனம்:—"கங் கைக்கண் இடைச் சேரி." என்பது. ஈண்டுக் கங்கை யென்னும் பதம் தனது சத்தி யர்த்த மாகிய பிரவாகத்தை விட்டுத் தீரத்தை யுண ர்த்துதலின் விட்ட விலக்கணை. பரியங்கங் கரை கின்றது என்பதும் அது.

வாச்சியார்த்தத்திற்கும் அந்நுவயம் உள்ள விடத்து விடாத விலக்கணை. எங்ஙனம்:—"பூ னை குடியாமற் பாலைக் காக்குக". என்பது. ஈண் டுப் பூனை யென்னும் பதம் தனது சத்தியர்த்த மாகிய மாற்சாரத்தையும் விடாது பாலைப் பரு குவனவாகிய வேனைக் காகம் குக்குட முதலிய வற்றையும் உணர்த்தலால் விடாத விலக்கணை. கவிகையாளர் செல்கின்றார் என்பதும் அது.

வாச்சியார்த்தத்தினது ஏகதேசத்தை விட்டு ஏகதேசத்திற்கு அந்நுவயம் உள்ள விடத்து விட்டும் விடாத விலக்கணை. எங்ஙனம்:— "அது நீ யானாய்." என்பது. ஈண்டு அது என் னும் பத வாச்சிய மாகிய சர்வஞ்ஞத்துவ முத லிய வற்றை யுடைய பரமான்மாவின் மாட்டு,

நீ என்னும் பதவாச்சியமாகிய அந்தக்கரணமு தலியவற்றை யுடைய சிவான்மாவிற்கு அபே தாந்துவயம் உண்டாகாமையான், ஈரிடத்தும் விசிட்டாம்சத்தை நீக்கின் அது வென் பத இலட்சியமாகிய சுத்தத்திற்கு நீ யென் பத இ லட்சியத்தோடு கூட வபேதாந்துவயம் உண் டாகும் என்க. இவ்வுதாகரணம் சீவனுக்கும் பிரமத்திற்கும் ஐக்கியங்கூறும் வேதாந்தி மத ப்பிரகாரங் கூறப்பட்டதெனவும், நையாயிகர் க்கு இது உடம்பாடன்மையின் அவராற் காட் டப்படும் உதாகரணம் "அவன் இவன்." என் பது எனவும் உணர்க.

சாத்த போதத்தைக் குறித்து ஆகாங்க்ஷை, யோக்கியதை, சந்நிதி, தாற்பரியங்கள் சககா ரிகாரணங்கள்.

அவற்றுள், ஆகாங்க்ஷை யாவது ஒரு பதந் தன்னோடு அந்துவயித்துப் பொருண் முடித் தற் கியைந்த மற்றைப் பதத்தை அவாவி நிற்றல். கடம் கன்மத் தன்மை கொணர்தல் முயற்சி என்புழி அந்துவய போதம் இன்று ஆகாங்க்ஷை யின்மையின்.

பாத நிச்சயத்தினது அபாவம் யோக்கியதை. "வன்னியால் நனைக்கின்றான்," "சலத்தாற் றகி

க்கிற்றான்." என்புழி அந்நுவய போதம் இல்
று, யோக்கியத் தன்மை யின்மையின்.

வியவதானம் இல்லாத சம்பந்தத்தினது பிர
தியோகி ஞானம் ஆசத்தி. "கிரி புசிக்கப்பட்ட
து வன்னியுடைத்து தேவதத்தனால்." என்புழி
அந்நுவயபோதம் இன்று, ஆசத்தி யின்மையி
ன். கிரிவன்னியுடைத்து தேவதத்தனாற் புசிக்
கப்பட்டது. என மாறின் அந்நுவய போதம்
உண்டென்க.

அவ்வவ் வர்த்த வுணர்ச்சி யிச்சையான்
உச்சரிக்கப்படுந் தன்மை தாற்பரியம். "சைந்
தவங் கொணர்குதி" என்னும் வாக்கியம் போ
சன காலத்துக் கூறப்படின் அசுவத்திற்குப்
போதம்உண்டாகாது இலவணத்திற்குப் போ
தம் உண்டாகும் எனவும். பிரயாண காலத்
துக் கூறப்படின் இலவணத்திற்குப் போதம்
உண்டாகாது அசுவத்திற்குப் போதம் உண்
டாகும் எனவும் உணர்க.

வாக்கியம் வைதிகம் இலௌகிகம் என விரு
வகைத்து. அவற்றுள் வைதிகம் ஈசுரனாற்
கூறப் பட்டமையிற் சர்வமும் பிரமாணம்.
இலௌகிகத்தின் ஆப்த வாக்கியம் பிரமா
ணம். ஏனையது அப்பிரமாணம்.

அற்றேல், வேதம் அநாதியாகலான் ஈசுரனு ற் கூறப்பட்ட தென்பது எங்ஙன மெனின் :— அற்றன்று, "வேதம் புருடனால் இயற்றப்பட் டது, வாக்கிய சமூக மாகலின் பாரத முதலிய வற்றின் வாக்கியம் போலும்." என்னும் அநு மானத்தான் உணரப்படுதலான் என்க.

அற்றேல், இப்பதங்கள் நினைப்பிக்கப் படும் அர்த்த சம்சர்க்க முடையன, அவாய்நிலை முத லிய வற்றை யுடைய பத கதம்ப முடைமை யின், "நம்மனோர் வாக்கியம் போலும்," என் னும் அநுமானத்தானே சம்சர்க்க ஞானந் தோன்றலின் சத்தம் பிரமாணாந்தர மன்று எனின் :—அற்றன்று, சத்த ஞானம் அநுமிதி ஞானத்திற்கு வேறாய விலக்கண முடைய தெ ன்பதற்குச் "சொல்லான் உணர்ந்தேன்" என் னும் அநு வியவசாயமே சான்றாதல் சர்வசம் மத மாகலின்.

வைசேடிகர் பதவாச்சியத் தன்மைக்கு வி யாப்பிய மாகிய சாதிருசிய முதலிய பராமரி சத்தானே பதவாச்சியத்திற்கு அநுமிதி பிறத் தலான் உபமானம் பிரமாணாந்தர மன்று என் று கூறுப; அது பொருந்தாது, வியாத்தி ஞானம் இன்றியும் பதவாச்சியத்தன்மைப் பிர

மிதி தோன்றுதல் அநுபவ சித்த மாகலான்.

இனி மீமாஞ்சகர் "பகல் உண்ணான் தேவ தத்தன் பருத்திருப்பன்" எனக் கண்டாயினுங் கேட்டாயினும் உணர்ந்த வழிப் பருமை வேறோராற்றால் ஆகாமையின் இரவுண்டல் பொருளாற் கொள்ளப்படு மாகலின், அருத்தாபத்தி வேறு பிரமாண மென்று கூறுப, அது பொருந்தாது, "தேவதத்தன் இரவுண்பன்," பகற் புசியானும் பருத்திருத்தலான் என்னும் அநுமானத்தானே யிரவுண்டல் பெறப்படுதலான் என்க.

பௌராணிகர் பிரமாணாந்தரம் எனக் கூறும் "நூற்றில் ஐம்பது உண்டு" என்னுஞ் சம்பவமும், "இவ்வாலிற் பேய் உண்டு" என்னும் ஐதிகமும் அநுமானப் பிரமாணத்தின் கண்ணுஞ் சத்தப் பிரமாணத்தின் கண்ணும் அடங்குதலான், அவை வேறன்றென்றுணர்க.

சத்தநிரூபணம் முடிந்தது.

## தர்க்காமிர்தம்

முற்றியது.

சிவமயம்.

# தர்க்காமிர்த சங்கேத பதார்த்தாவலி.

## அ.

அகம் - மனம், உள்.
அகவிந்திரியம் - மனம்.
அசமவாயி - சமவாயியல்லது.
அசம்பந்தம் - சம்பந்தமின்மை.
அசம்பவம் - சம்பவித்தலின்மை.
அசாதாரணம் - சிறப்பு.
அசித்தம் - பேறில்லது, முடிவுபெறாமை.
அதிதேசம் - மாட்டிபுணர்த்துவது.
அதிவியாத்தி - மேல்வியாபித்தல்.
அதீந்திரியம் - இந்திரியத்தையதிக்கிரமித்தது.
அத்தியந்தாபாவம் - முழுதுமின்மை.
அநவத்தை - முடிவின்மை.
அநுபசங்காரி - முடிவுபெறாமை.
அநுபலத்தி - ஞானுபாவம்.
அநுமானம் - கருதல்.
அநுமிதி - கருத்துணர்வு.
அநுவியவசாயம் - பின்னிகழுணர்வு.
அனைகாந்திகம் - பிறழ்வுடையது, நியமமில்லது.
அந்தரிந்திரியம் - உட்பொறி.
அந்நியதரகன்மசம் - இரண்டில் ஒன்றன் கர்மத்தான் ஆவது.
அந்நியதாசித்தி - வேறோராற்றாற் பெறப்படல்.
அந்நியோந்நியாபாவம் - ஒன்றி னொன்றின்மை.
அந்நுவயம் - உடம்பாடு, புணர்ச்சி.
அபரத்துவம் - பின்மை.
அபிதேயம் - பெயரிட்டு வழங்கப்பாலது.
அயதார்த்தம் - பொய்.
அருத்தாபத்தி - பொருட்பேறு.
அலௌகிகம் - லௌகிகமல்லது.
அவ்வியாத்தி - வியாபித்தலின்மை.

## ஆ.

ஆகாரம் - உருவம்.
ஆகாங்கைக்ஷ - அவாய்நிலை.
ஆசத்தி - அண்மை.
ஆசிரயம் - பக்கம், இடம்.

ஆசிரயாசித்தம் - சார்பசித்தம்.
ஆதாரம் - தானம்.
ஆதுனிகர் - இக்காலத்தர்.
ஆதேயம் - தானி.
ஆத்தன் - உரியோன்.
ஆந்தரப்பிரத்தியக்ஷம் - உட்காட்சி.
ஆந்தரம் - அகத்தது.
ஆபாசம் - போலி.
ஆரணியகன் - வனவாசி.
ஆரியர் - பூசிக்கப்படுவோர்.
ஆவாபம் - இடுதல்.

இ.

இச்சை - விருப்பு.
இந்திரியம் - பொறி, ஆன்மாவின் அடையாளம்.
இலக்கணம் - சிறப்பியல்பு, அடையாளம்.
இலக்ஷணை - குறிப்பு.
இலக்கியம் - இலக்கணமுடையது.
இலாகவம் - குன்றக்கூறல்.
இலிங்கபராமரிசம் - குறியாராய்ச்சி.
இலிங்கம் - குறி, ஏது.

உ.

உட்டணம் - சூடு.
உதாரணம் - எடுத்துக்காட்டு.
உத்துவாபம் - குறைத்தல்.
உத்தேசகம் - பிரதிபந்தகப் பிரதிபந்தகம்.
உத்தேசியம் - பக்கம்.
உபதேசம் - அறிவுறுத்தல்.
உபநயம் - சமீபத்தில்கொணர்தல்.
உபமானம் - ஒப்புமை.
உபமிதி - ஒப்புமையுணர்வு.
உபயகர்மசம் - இரண்டன் கர்மத்தாலாவது.
உபலத்தி - ஞானம்.
உபாதி - செயற்கை, பயப்பது.
உருவம் - நிறம்.

ஏ.

ஏகாந்தம் - நியமம்.
ஏது - காரணம், இலிங்கம்.
ஏத்துவாபாசம் - ஏதுப்போலி.

க.

கடம் - குடம், பாய்.
கதம்பமுகுளம் - கடப்பம்மொட்டு.
கதம்பம் - கூட்டம், கடம்பு.
கபாலம் - கடத்தின் அவயவம்.
கரணம் - முக்கியகாரணம்.
கருமம் - தொழில்.
கவயம் - காட்டா.

கு.

குணம் - பண்பு.
குணி - பண்பி.

கோ.

கோசம் - சொற்பொருளுணர்த்துநூல்.
கோசரம் - எட்டுவது.

## கௌ.

கௌணி - குணசம்பந்தி.

கௌரவம் - பிணைபடக்கூடல்.

## ச.

சககாரி - துணை.

சங்கடம் - சந்தியுடையது.

சங்கியை - எண்.

சங்கை - எண்.

சதிருசம் - ஒப்புமை.

சத்தம் - உரை, ஒலி.

சத்தி - ஆற்றல்.

சத்தை - உண்மைத்தன்மையாகிய சாதி.

சந்நிதானம் - அண்மை.

சந்நிதி - அண்மை.

சந்நிகர்ஷம் - சம்பந்தம்.

சபக்கம் - சமபக்கம்.

சமவாயம் - ஒற்றுமை.

சமவாயி - உபாதானம், முதல்.

சமவேதம் - சமவாய சம்பந்தத்தான் விருத்தியாயது.

சம்சயம் - ஐயம்.

சம்பவம் - உண்மை.

சரு - தேவருணவு.

சலம் - ஒருகருத்தைப் பற்றிக் கூறிய மொழிக்கு வேறுபொருள் படைத்திட்டுக்கொண்டு பழித்தல்.

சலீயம் - சலசம்பந்தம்.

சவிகற்பம் - விகற்பமுளது.

சற்பிரதிபக்கம் - உள்ளவிரோதி உடையது.

## சா.

சாட்சுஜம் - சட்சுஜந்நியம்.

சாதனம் - ஏது, முடிப்பது.

சாதாரணம் - பொது.

சாதி - சாமானியம், போலியுத்தரம்.

சாதிருசியம் - ஒப்புமை.

சாத்தம் - உரையுணர்வு.

சாத்தியம் - முடிக்கப்படுவது.

சாமயிகாபாவம் - சமயத்திற்றோற்றும் இன்மை.

சாமானியம் - பொதுமை.

சாம்சித்திகம் - தானேயாவது.

சாவயவம் - அவயவத்தோடு கூடியது, காரியம்.

## சி.

சித்தம் - நிச்சயிக்கப்பட்டது, முடிக்கப்பட்டது.

சித்தசாதனம் - நிச்சயித்ததை நிச்சயிக்க முயறல்.

சித்தாந்தம் - முடிந்தமுடிபு.

சித்தி - சாத்தியநிச்சயம்.

சித்திரம் - கலப்பு.

## சீ.

சீதம் - குளிர்ச்சி.

## சு.

சுருதி - கேட்டற்குக்கருவி.

சுவார்த்தம் - தன்பொருட்டு.

செ.

செற்பம் - சாதனம் இரண்டுள்ள தன்கண் வெல்லும் வேட்கையுடையான் கதை.

சை.

சைந்தவம் - சிந்துவில் உற்பவித்தது.

சிந்து - கடல், ஓர்தேசம்.

சையுத்தம் - சையோக சம்பந்தத்தான் விருத்தியாயது.

சையோகம் - புணர்ச்சி.

சொ.

சொரூபகானி - இலக்கண பங்கம்.

சொரூபம் - ஏது, இலக்கணம்.

சொரூபாசித்தம் - ஏதுவசித்தம்.

சோ.

சோத்திரம் - காது.

ஞே.

ஞேயம் - அறியத்தக்கது.

த. தா.

தத்துவஞானம் - உண்மையறிவு.

தாற்பரியம் - சொல்வான் குறிப்பு.

தி. தீ.

திதித்தாபகம் - நிலைபெறுத்துகை.

திரவியம் - பொருள்.

திருட்டாந்தம் - காணப்பட்டமுடிபுடையது.

தீர்க்கசூகம் - நீண்டவால்.

து.

[illegible]வம்சம் - அழிவு.

துவேஷம் - வெறுப்பு.

தை.

தைசசம் - தேயுசம்பந்தம்.

தோ.

தோடம் - குற்றம்.

ந. நா.

நவீனர் - புதியர்.

நாகரிகன் - நகரவாசி.

நி.

நிகமனம் - முடிக்குமுடிக்கும்.

நிக்கிரகத்தானம் - தோல்வித்தானம்.

நிச்சயம் - நிச்சயித்தல்.

நிர்விகற்பம் - விகற்பமில்லது.

நிவிர்த்தி - பிரவிருத்தியல்லது.

நிஷித்தம் - தள்ளப்பட்டது.

நை.

நைமித்திகம் - நிமித்தத்தான் ஆவது.

ப.

பகிரிந்திரியம் - புறப்பொறி.

பக்கம் - சாத்தியத்தானம்.

பதனம் - வீழ்தல்.

பரத்துவம் - முன்மை.

பராமரிசம் - ஆராய்ச்சி.

பரார்த்தம் - பிறர்பொருட்டு.

பரிமாணம் - அளவு.

பவிடயம் - எதிர்வு.

பா.

பாகம் - தேயுசையோகம்.

பாகியப் பிரத்தியக்ஷம் — புறக்காட்சி.
பாகியம் — புறத்தது.
பாசுவரம் — விளக்கம்.
பாதிதம் — தடுக்கப்பட்டது, மறுப்புடையது.
பார்த்திவம் — பிருதிவிசம்பந்தம்.
பாவம் — உள்ளது.
பானம் — ஞானம்.

பி.

பிடரம் — கடம்.
பிரகாரம் — விசேடணம், அலடை.
பிரசித்தம் — வழங்கப்பட்டது.
பிரதத்துவம் — வேற்றுமை.
பிரதிஞ்ஞை — மேற்கோள், சம்மதி
பிரதிபந்தகம் — தடை.
பிரதியோகி — எதிர்மறை.
பிரதீதி — ஞானம்.
பிரத்தியக்ஷம் — காட்சியுணர்வு, கண்டல்.
பிரத்துவஞ்சாபாவம்—அழிவுபாட்டபாவம்.
பிரமாணம் — அளவை.
பிரமேயம் — அளவையான் அளக்கற்பாலது.
பிரயோசகம் — காரணம்.
பிரயோச்சியம் — காரியம்.
பிரவிருத்தி — யற்சி.
பிராகபாவம் — முன்னபாவம்.
பிராசீனர் — பழையர்.
பிராமாணியம் — பிரமாத்துவம்
பின்னம் — பேதவிசிட்டம்.

பீ.

பீலு — அணு.

பூ.

பூதம் — இரப்பு.

பே.

பேதம் — அந்நியோந்நியசபாவம்.

போ.

போதம் — ஞானம்.

ம.

மகானசம் — அடுக்களை.
மனனம் — யுத்தியால் அநுசிந்தனைசெய்தல்.

மா. மி.

மாதா — ஞாதா.
மிதி — ஞானம்.

மு.

முமூட்சு — மோக்கவிச்சையுடையான்

மே. மௌ.

மேயம் — ஞேயம்.
மௌனி — மோனமுடையான்.

ய.

யதார்த்தம் — மெய்.
யத்தனம் — முயற்சி.
யவம் — வாற்கோதுமை.

யு.

யுஞ்சானன் — யோகத்தை முயல்பவன்.

யுத்தன் - யோகத்தில்முழுகினோன்.

யோ.

யோகம் - காரணக்குறி, சித்தவிருத்தியை நிரோதஞ்செய்தல்.

யோகரூடி - காரணவிடுகுறி.

யோகி - யோகமுடையான்.

யோக்கியதை - தகுதி.

யோக்கியம் - தக்கது.

வ

வத்து - பொருள்.

வர்த்தமானம் - நிகழ்வு.

வா.

வாக்கியசேடம் - வாக்கியக்குறை

வாச்சியம் - கூறத்தக்கது.

வாதம் - உண்மையுணர்தல் வேட்கையோன்கதை.

வாயவீயம் - வாயுசம்பந்தமாயது.

வி.

விகற்பம் - வேறுபாடு, பேதம்.

விகிதம் - விதிக்கப்பட்டது.

விசிட்டம் - விசேடணத்தோடுகூடியது.

விசேடணம் - வேறுபடுத்துவது. அடை.

விசேடம் - சிறப்பு.

விசேடியம் - வேறுபடுத்தப்படுவது, முதல்.

விதண்டை - தன்கோட் பாட்டை நிலைபெறுத்தாதகதை.

விதேயம் - சாத்தியம்.

விபக்கம் - விஷமபக்கம்.

விபரியயம் - திரிவு.

விபாகசம் - பிரிவான் ஆவது.

விபாகம் - பிரிவு.

விபு - வியாபக முடையது.

வியபிசாரம் - பிறழ்வு, நியமமின்மை.

வியவகாரம் - வழக்கம்.

வியவசாயம் - ஞானம்.

வியாகரணம் - இலக்கணம்.

வியாத்தி - உடனிகழ்ச்சி

வியாபகம் - அதிகதேசவிருத்தி.

வியாபாரம் - தொழில்.

வியாப்பியம் - நூனதேசவிருத்தி.

வியாவர்த்தகம் - வியாவிருத்திஜனகம்.

வியாவிருத்தி - பிரிவு, பிரித்தல்.

வியோமம் - ஆகாசம்.

விருத்தம் - மாறுகொள்வது, முரணுவது.

விருத்தி - நிகழ்ச்சி.

விவரணம் - வெளிப்படுத்துவது.

வெ.

வெதிரேகம் - இன்மை, மறை.

வை.

வைசிட்டியம் - விசிட்டத்தின் தன்மை.

பதார்த்தாவலி முடிந்தது.